நெல்லை

# காந்திமதி அம்மன்

## தேவிதரிசனம் (V)



வாழ்வில்
நம்பிக்கையூட்டும்
அம்மன்
வெளியீடுகள்



பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

# தேவி தரிசனம்

## (நெல்லை காந்திமதி அம்மன்)

பொன். பாஸ்கர மார்த்தாண்டன்



அம்பாள் பதிப்பகம்
48, ராம நாயக்கன் தெரு
நுங்கம்பாக்கம்
சென்னை—600 034

முதல் பதிப்பு : டிசம்பர், 1981



தாமரை மணாளன் தயாரிப்பு

அட்டையை அலங்கரிக்கும்
காந்திமதி அம்மன்
மூலஸ்தான வண்ணத்
திருவுருவத்தை வரைந்து
உதவியர் ஓவியர் மணிவேல்.



விலை ரூ: 3

அச்சிட்டோர் : அன்னை அஞ்சுகம் அச்சகம்,
இராயப்பேட்டை, சென்னை-600014.

3-3

# வேதங்கள் வேலி கண்ட எங்கள் ஞானத்தாய் காந்திமதி!

## கல்லுக்குள் மறைந்திருந்த ஈசன்

"மருந்தவை மந்திரம் மறுமைநன் வனறியவை மற்று
மெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றை பொன் சொறிதரத்
துன்றுபை பூஞ்
செருத்திசெம் பொன்மலர் திருநெல்வேலியுரை செல்வர்
தாமே!'

—திருஞானசம்பந்தர்.

### 1

காணீர், காணீர்...காணும் பேறு பெற்றோரெல்லாம் அதோ அங்கே ஒரு தெய்விகக் காவியம் திருவுலா வருவதைக் காணீர்! காணீர்!

பொதியமலையில் அவதரித்து, 'பொருநை' என்று பெயர் தரித்து, மண்பட்ட இடமெல்லாம் மாதவம் சிலிர்க்க புனலோடும் புவியெங்கும் பொழில்களும் எழில்களும் பூரித்துச் சிரிக்க, அதோ அந்தத் திருநெல்வேலிச் சீமையில் அகத்தியர் மகள் ஆனந்த நடைபயிலும் அழகைக் காணீர், காணீர்!

ஆம்; அகத்தியர் அமைந்திருக்கை கொண்ட பொதிகை மலையில் உற்பத்தியாகி அழகுநடை பயின்றோடும் தாமிர வருணி நதியைத்தான் குறிப்பிடுகிறோம்.

தாமிரச் சக்தியைத் தன்னுள் மாமருந்தாய், மந்திரப் பெருந்திறனைய் கொண்டு தன்னேரில்லாத் தகவுடன் அந்த நதிக் கொடியாள் நடந்துவரும் பாதையெங்கும்—

தமிழும் சைவமும் தழைத்து நிற்கின்றன.

அறமும் அருளும் ஒருங்கிணைந்து பயன் சொரிகின்றன.

செல்வமும் சீலமும் சீர்பெற்றுத் திகழ்கின்றன.

அனைத்திற்கும் சிகரச் சிறப்பாக—

அந்த நதித்திரம் புகழ் மணக்க, நாற்றிசையும் அருள் மணக்க, நாநிலங்கள் நலம் மணக்க,

தவமும் ஞானமும் ஒரு தாய் உருவில் ஒளி சிறந்து ஜொலிக்கின்றன. அந்த நதி தீரத்தில்...

யார் அந்தத் தாய்...?

உலகனைத்தின் பிறப்பு, இருப்பு, அழிவு வடிவான தத்துவ விளையாட்டின் ஆதர்ச சக்தியான பிரணவஸ்வரூபிணியாகவும்—மூல மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டவளாய், அவர்களைத் தம்முள் சங்கமிக்கச் செய்தவளுமாய்-மகா மாயையாய்-மாதுர் பிரம்மமாய்-வித்யா ஸ்வரூபிணியாய், வேத முதல்வியாய்த் திகழும் ஆதிபராசக்தியே அவள்...

அவளே...சௌந்தர்ய வடிவு என்று பொருள்படும் வண்ணம் **காந்திமதி** என்று நாமம் துலங்க திருநெல்வேலித் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் எம் அன்னை...

தவத்துக்கு காஞ்சி காமாட்சி என்பர்...எம் அன்னை காந்திமதியையோ தென்புலத்து காமாக்ஷி என்பர். அவள் இயற்றிய ஓர் அருந்தவச் சிறப்பால்...

புனிதத்துக்கு கங்கை என்பர்...எம் அன்னை காந்திமதியின் திருப்பாதம் தழுவிச் சிறக்கும் தாமிரவருணிக்கு தென் கங்கை என்று பெயர். அன்னையின் ஆசி பெற்ற மகிமையால்...

இம்மட்டுமா எம் அன்னையின் மாட்சி?

3-3

ஆடல் நாயகனும் நடராஜப் பெருமான் தில்லை முதல் ஐம்பெருஞ் சபைகளில் ஆடி அருள் பொழிந்தவர். மற்ற அத்தனை சபைகளிலும் அவர் ஆடியவற்றைக் கண்டு விண்ணும், மண்ணும் போற்றிப் பூரித்து உய்ந்தது.

எம் தாய் காந்திமதிவாழ் திருநெல்வேலி தாமிர சபையிலோ, அவர் ஆட்டத்துக்கு ஓர் வல்லமை மிக்க பின் புலம் அமைந்திருக்கிறது. இங்கு ஈசனை ஆட்டுவித்தவர் எம் அன்னை காந்திமதி. அவள் மனத்தை நிறைவிக்கவே, திருமுடி சடை விரிய, ஆடக் காதில் குழையாட, அங்கையில் மழுவாட, அரையில் புலித்தோலாட, அனைத்துலகமும் ஆனந்தப் பரவசத்தில் ஆட ஆதிநாயகன் அத்தாமிர சபையில் ஆடினான்.

ஆடல்வல்லானை ஆட்டுவித்த அம்மையின் அருள் வரலாறு அம்மம்மா...

உண்டிக்கு உறுபொருளானது நெல்!

உயிருக்கும் ஆத்மாவுக்கும் நிறையானது நெல்லை!

காரணம்; அந்த நெல்லையம்பதியில் நடந்த ஞான அற்புதம்.

வித்துகள் விளைவதுண்டு மற்ற மண்ணில்...

அந்தத் திருநெல்வேலிச் சீமையில்தான் வேதங்கள் மூங்கில் காடாக விளைந்தன!

இதிகாசப் பெருங்காலத்தில் நிகழ்ந்த ஓர் புனித வரலாறு அது—

இறைவனின் திருமூச்சே வேதங்கள். இறைவனால் பிறப்பு விக்கப்பட்ட வேதங்களுக்கு ஒரு புதுமையான ஆசை ஏற்படுகிறது.

தம்மை பிறப்புவித்த இறைவனுக்கே தாயாக அமைதல் வேண்டும் என்று ஓர் வேட்கை அவற்றிற்கு.

பரமனிடம் அவை தம் எண்ணத்தை வெளிப்படுத்தி நின்றனவாம்...

''தேவதேவா! உமக்குத் தாயாக நாங்கள் இருக்க வேண்டும். நாங்கள் ஈன்றெடுக்கும் ஒரு முத்தாகத் தாங்கள் அமைதல் வேண்டும். அந்தத் தாய்மை நிலையில் நாங்கள் இருந்து தங்கள் திருநடனத்தையும் பார்க்க வேண்டும்!'' என்று இறைவனிடம் கோரி நின்றன வேதங்கள்.

அந்தப் புதுமையான கோரிக்கையை ஒரு தத்துவமாய் பூமியில் நிறைவேற்றி வைத்தார் எம்பிரான்...

அதுவே, நெல்லைச் சீமை பெற்ற பேறாக மலர்ந்தது. அதோ...தாமிரவருணி தீரத்தில் திடீரென்று ஒரு வேணு வனம்—மூங்கில் காடு பூத்தொளி வீச செழித்து வளர்ந்து நிற்கின்றது.

அங்கு தோன்றிய மூங்கில்கள் தாம் வேதங்கள்...

சாதாரண மண்ணில் சாமான்ய வித்துக்களே வளரும். நெல்லை மண்ணில் வேதங்களே விளைந்தன என்றால், அந்த மண்ணில் இருந்த அற்புதம்தான் என்னே...?

சிலமும், ஞானமும் அந்த மண்ணில் ஒரு தவமாய் இணைந்திருந்த பெருமையால்தானோ என்னவோ, வேதத்தையே விளைவித்தது அந்த நெல்லைபூமி.

அந்த மூங்கில் வனத்துள் ஓர் அற்புத சுயம்புலிங்கமாய் இறைவன் வளர்ந்து நின்றார்...வேய் (மூங்கில்) வனத்துள் ஒரு முத்தாகப் பிறந்ததால், லிங்கேஸ்வரன் 'வேய்முத்தர்' என்ற பெயரும் பெற்றார்...

## 2

**வே**தங்கள் மூங்கிற் காடாக முகிழ்த்து வளர்ந்த அந்த ஞான பூமியில் சிவலிங்கமாய் எழுந்தருளியிருந்த இறைவன், அந்த வேதபூமியை ஞாலத்தார் போற்றும் பேரருள் திருத் தலமாக்கத் திருவுளம் கொள்கிறார்...

ஐயனின் திருவுளம் ஓர் அற்புத மகிமை வரலாறாகத் தொடருகிறது...

ஆயர் குலத்தவர் ஒருவர் அரண்மனைக்குப் பால் வழங்கும் பொறுப்பேற்றிருந்தார். ராமக்கோனுர் என்பது அவருடைய பெயர்.

தினந்தோறும் பால் குடம் ஏந்தி அந்த மூங்கில் காட்டின் வழியாகப் பயணம் செய்து அரண்மனைக்குச் செல்வது அவர் வழக்கம். அப்போது நெல்லைச் சீமையை ஆண்டு வந்த மன்னனின் பெயர் ராம பாண்டியன்!

ஜீவன்களின் இகவாழ்க்கை, அன்னையூட்டும் திருமுலை யமுதமான பாலின் மூலம்தான் ஆரம்பமாகிறது.

மனித குலத்தில் பேரின்ப வாழ்க்கை செழிப்புறவும் பாலின் மூலமே கருணை பொழிய பரம்பொருளும் தேவ தேவியும் அருள் புரிந்தனர்.

'அதன் பலன்...?'

பால்குடம் ஏந்திய ராமக்கோனுரின் பாதையில் புதிய குறுக்கீடு...

இருளை அழிக்க ஒளி குறுக்கிடுவதுபோல்...

அஞ்ஞானத்தை அறுக்க மெய்ஞ்ஞானம் குறுக்கிடுவது போல்...

பேதைமையோடு இகவாழ்வில் நிறைவு கண்டு வாழ்ந்து வந்த ராமக்கோனுரின் வாழ்க்கையில் ஒரு கல் குறுக்கிட்டது.

மூங்கில் காட்டின் பாதை வழியே செல்லும்போது என்றுமில்லாதவாறு கல் இடற, கால் தடுமாறி தலையிலிருந்த பால் குடத்தை கீழே போட்டார்... அந்தப் புதுமையான விசித்திரக் 'கல்'லுக்கு அத்தனைப் பாலும் அபிஷேகம் ஆகியது!

அரசனுக்கு பால் போகவில்லை. பால் கல்லுக்கு அபிஷேகம் ஆனபின் எதைக் கொண்டு போவார் ராமக் கோனுர்!

மறுநாள் மிக மிக எச்சரிக்கையாகப் பால் குடத்தை ஏந்தி வருகிருர். அந்தக் கல்லில் மீண்டும் கால் படாதவாறு

எச்சரிக்கையாகத்தான் வருகிறுர். ஆனுல் அவருடைய சாமர்த்தியத்தையும் மீறி மீண்டும் கல் இடறுகிறது.

அந்த இடறல், மனித குலத்துக்கு இடர் வராமல் காப்பதற்காக ஏற்பட்ட இடறல் என்று புரியாமல் ராமக் கோனுர் தனக்கு ஏதோ இடையூறு ஏற்பட்டதாகப் புலம்பினுர். முதல் நாளைப்போலவே அந்த மாயக் கல்லுக்கு அப்படி பாலை அபிஷேகமாகக் கொடுத்துவிட்டு, அரண் மனைக்குச் செல்லாமலே திரும்பிவிட்டார்.

இப்படி மறுநாள்...மறுநாளுக்கு மறுநாள்... மாறுதல் இல்லாமல் ஒவ்வொரு நாளும் இந்த இடறல் நடந்தது...

தொடர்ந்து அரண்மனைக்குப் பால் வராமல் போகவே மன்னனுக்கு சேதி எட்டியது. ராமக்கோனுர், அரச சந்நிதிக்கு வரவழைக்கப்பட்டார். விசாரணை நடந்தது.

மூங்கில் காட்டில் நடந்த இடறல் திருவிளையாடலைப் பற்றிக் கூறினுர் ராமக்கோனுர்.

அரசனுல் நம்பமுடியவில்லை. 'நாளை பால் வராவிடில் அரசாணை தப்பாது' என்று கோனுரைக் கண்டித்து அனுப்பினுர்.

மறுநாள் ராமக்கோனுருக்கு ஆவேசம்... அரசாணையி லிருந்து தன்னைக் காத்துக் கொள்ளும் ஆவேசம்... தன்னை அரசாணை முன் நிறுத்திவிட்ட அந்த மாய்மால இடறுதலை வெல்லவேண்டும் என்று ஆவேசம்.

அன்று அவர் பால் குடத்தை மட்டும் எடுத்துவர வில்லை. கல்லை உடைத்தெறியும் கருவியையும் கையில் எடுத்துக் கொண்டு வருகிறுர்.

'மீண்டும் அந்தக் கல் மட்டும் என்னை இடறட்டும்...!' என்ற வைராக்கியம் நிறைந்த கோபம்.

மீண்டும்... அதே இடத்தில்-அதேபோல் அவருடைய எச்சரிக்கையும் மீறி அதே கல் இடறியது. பால் சிந்திக்

கல்லில் அபிஷேகமாகியது. ராமக்கோனுர் உள்ளத்தில் ஆவேசம் பால் பொங்கும் வேகத்தில் பொங்கியது...

மறுகணம் தன் கையில் இருந்த ஆயுதத்தால் கல்லே உடைப்பதற்காக வெட்டினுர்...

அடுத்த விஞடி அங்கே அந்த அற்பதம் நிகழந்தது...

அடிபட்ட கல்லிலிருந்து ரத்தம் பீறிட்டது...பாய்ந்தது! துடித்துப் பதறிப்போனுர் ராமக்கோனுர்...

ரத்தம்! எப்படி வந்திருக்க முடியும்...? கல்லுக்குள் ரத்தமா?

பாதகம் ஏதோ நிகழ்ந்துவிட்டது என்ற பதட்டத்துடன் அரசவைக்குப் பதறியோடினுர் ராமக்கோனுர். மன்னரிடம். சேதி சொன்னுர். அரசருக்கும் அந்தச் சேதி அதிர்ச்சியூட்டியது.

உடனே அந்த அற்புதத்தைக் காண வேணுவனத்திற்கு வந்தார் மன்னர்.

அங்கே கல்லிலிருந்து ரத்தம் தொடர்ந்து பொங்கிக் கொண்டிருந்தது, மனித பாபங்களின் வெளியீட்டைப் போல்...

திடீரென்று மன்னன் ராமபாண்டியனுக்கு ஓர் யோசனே உதித்தது.

அந்தக் கல்லேச் சுற்றியுள்ள நிலத்தை அகழ்ந்து பார்க்க உத்தரவிட்டார்.

நிலத்தை அகழ்ந்தார்கள்.

அங்கே...

நெடியமால்கூட காணமுடியாத திருப்பாதத்து நாயகனுன பரமநாயகன் அந்த நிலத்துள் சிவலிங்க வடிவில் சுயம்பு மூர்த்தியாக எழுந்தருளியிருந்தார்.

ராமக்கோனுரும், மன்னன் ராமபாண்டியனும் அரற்றினர்; ஆடினர்; பாடினர்.

இடறல் மூலம் தம்மை ஆட்கொண்ட விடையேறு உமையொருபாகனை நிலம் வீழ்ந்து தொழுதனர்...

அங்கே அந்த ஏழை ராமக்கோனருக்கும், அரசனை ராமபாண்டியனுக்கும் ஒருசேர தம் விசுவரூப தரிசனம் காணச் செய்தார் ஈசன்...

ஜோதிவடிவான ஈசனும் சௌந்தரிய வடிவமான எம் அம்மையும் அருட்கோலம் கொண்ட திருக்காட்சி கண்டு உய்வுற்றனர் ராமக்கோனரும்-மன்னர்ராமபாண்டியனும்...

வேதசீலத்தில் ஊறித் திளைத்தவர்களும் ஞானமுள்ள வர்களும் முற்றும் காணுத அத்திருத்தரிசனத்தை அவர்கள் இருவரும் கண்டதால் அவர்கள், 'முழுதும் கண்ட ராமக் கோன்'—'முழுதும் கண்ட ராமபாண்டியன்' என்று பெயர் பெற்றனர்...

தேவதேவியரின் தரிசனம் பெற்றதும் மன்னன் அவ்விடத் திலேயே-காட்டை அழித்து ஆலயம் அமைத்தான்.

அதுவே இன்று திருநெல்வேலித் திருநகரில்அமைந்துள்ள பழம்பெரும் திருவாலயம். சிவலிங்கம் காட்சி தந்த இடத்தில் வேய் முத்தன்-வேணுவன நாதர் என்று பெயர் வழங்க-திருவருள் தரும் நெல்லையப்பரின் மூலஸ்தானம் அமைந்துள்ளது.

அற்புதப் பேரெழிலுடன் அம்பிகை தரிசனம் தந்ததால் வடிவுடை நாயகி எனப் பொருள் தரும் 'காந்திமதி'என்றும் பெயர் பெற்ருள்...

ஆமாம்: இறைவனின் எண்ணற்ற திருவிளையாடல் களில் ஒன்ருன இந்த திருக்காட்சிவெளிப்படுத்துவது என்ன?

மனிதன் பிறவியைக் கடைத்தேற்றும் ஆத்ம பக்தி செலுத்த வேண்டிய மனம் என்னும் பால் ஒவ்வொரு ஜீவனிடமும் அமைந்திருந்தாலும், அதை உரிய இடத்தில் சேர்க்காது பேதைமை வேகத்தில் உலகியல் லாபம் தேடி

மாத்திரமே அலேகிருேம். இங்கே ஒவ்வொரு ஜீவனும் ஒவ்வொரு ராமக்கோன்; உலகியல் லாப சுகம்தான் அரசன்.

நம் அஞ்ஞானப் பாதையில் குறுக்கிட்டு, நம் ஆத்ம பக்தியை தனக்கு அபிஷேகம் ஆக்கிக்கொள்ள ஞானமெனும் கல்லால் நம்மைத் தடுத்தாட்கொள்ள இறைவன் காத்திருப்பதை மாந்தருக்கு உணர்த்துவதே இந்த மண்ணில் விளேந்த ஒரு தத்துவம்...

## 3

'சிவதலத்தில் உயர்தலமாம் திருநெல்வேலி' என்ருெரு வாக்கு உண்டு. இந்தக் கூற்றுக்குக் காரணம் என்ன...?

வேதம் விளேந்த அந்தத் திருநாட்டில் விண்ணவர்களும், மண்ணவரில் உயர்ந்தோரும் அங்கு உருவாக்கிய சில அரிய சிலங்கள் தாம்...

'ஈசனுக்குத் தாயாகப் பிறக்கவேண்டும்' என்று வேதங்கள் வேண்டி, வரம் பெற்று திருநெல்லேலியில் மூங்கிற் காடாக மாறியதுபோல் அந்த மண்ணிற்கு தர்ம தேவனும் ஒரு புதுச்சிறப்பு சேர்த்தான்.

ஈசனே அணுகி, ''ஐயனே, வேதங்கள் பெற்ற பேற்றை நானும் பெறவேண்டும். ஞான பூமியான வேணுவனத்தில் (திருநெல்வேலியில்) நானும் தங்களுடன் ஒரு சிறப்புத் தகுதியுடன் வாழ வேண்டும்'' என்று கேட்டான் தர்மதேவன்.

''நீ வேண்டும் சிறப்புத் தகுதி என்ன...?'' என்று வினவினுர் தேவதேவர்.

''அம்மையப்பர்களான தங்களேச் சுமக்கும் வாகனமாக நான் அமைதல் வேண்டும்!'' என்று சொன்னுர் தர்ம தேவன்.

ஈசன் வரமருளினுர்.

இதன்படி அந்தத் தலத்தில் ஈசனின் வாகனமாக அமைந்திருப்பது ரிஷபமாக உருமாறிய தர்மதேவன்.

## நெல்லுக்கு வேலி கட்டிய நாதன்!

'முழுதும் கண்ட' ராமக்கோன் மூலம் தன் பிரசன்னத்தை வெளிப்படுத்திக்கொண்டு, வேய்முத்தர்—வேணுவனநாதர் என்ற திருநாமங்களுடன் வேணுவிவனத்தில் 'முழுதும் கண்ட' பாண்டியன் கட்டிய ஆலயத்தில் ஈசன் அமர்ந்து அருளாட்சி புரிந்து கொண்டிருந்தபோது ஒருநாள் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது...

**வே**தசர்மா என்பவன், அப்போது ஈசனுக்கு பூஜைத் தொண்டு செய்யும் பணியில் ஈடுபட்டிருந்தான்.

அன்றுடம் வேய்முத்தருக்கு நைவேத்தியம் செய்வதில் அவனுக்கு ஒரு நியமம் உண்டு. தினம்தோறும் அமுதுபடிக்கான நெல்லை உலர வைத்து, உது நீங்க தானே குத்தி அமுது சமைத்து ஈசனுக்கு நைவேத்தியமாகப் படைப்பான்.

அதன்படி ஒருநாள் வேய்முத்தருக்கு அமுது படைப்பதற்கான நெல்லை கோவிலுக்கு அருகில் உலரப்போட்டு விட்டுத் தாமிரவருணிக்கு நீராடப் போய்விட்டான்.

அவன் நீராடிக் கொண்டிருக்கும்போது திடீரென்று வானம் கருத்து மின்னியது.

வேதசர்மாவுக்குப் பதட்டம்! 'ஈசனுக்குரிய அமுதுபடி நெல்லைக் காயப் போட்டிருக்கிறேமே...அது மழையில் நனைந்தாலோ... மழையில் அடித்துச் செல்லப்பட்டு விட்டாலோ இறைவனைப் 'பட்டினி'ப் போட்ட பாவத்துக்குள்ளாகி விடுவோமோ...?' என்று தவித்தான்.

அவசர அவசரமாகத் தாமிரவருணியிலிருந்து கரையேறி ஆலயத்தை நோக்கி ஓடினன். அதற்குள் மழை கனமாகப் பெய்ய ஆரம்பித்துவிட்டது. வேதசர்மாவின்

மனத்தை வேதனை ஆட்கொண்டது. இனிமேலும் உலரப் போட்ட நெல் மிஞ்சியிருக்கும் என்ற நம்பிக்கை போய் விட்டது.

'அபசாரம் நிகழ்ந்துவிட்டதே!' என்று புலம்பிக் கொண்டே ஈசனின் ஆலயத்துக்குச் சென்று பார்த்தான். அங்கே...

என்னே அதிசயம்...! அத்துணை அடைமழையிலும் நிலத்தில் பரப்பிய நெல்லின்மீது ஒரு சொட்டு நீர்கூட விழ வில்லை. ஆனல், நெல்லைச் சுற்றி வேலியிட்டாற்போல் மழை கொட்டிக் கொண்டிருக்கிறது. ஆம்; மழை புகாத வாறு இறைவனே நெல்லுக்கு வேலியிட்டுக் காத்துநின்ருன்!

அன்று அத்தலத்தில் ஈசன் நிகழ்த்திக் காட்டிய அற்புதம் அந்த மண்ணுக்கு புதுப் பெயர் அளித்து விட்டது.

**ஈசன் நெல்லுக்கு வேலியாக நின்றதால் 'திருநெல்வேலி' என்று பெயர் பெற்றது.**

ஃ ஃ ஃ

இந்தத் திருவிளையாடல் மூலம் ஈசன் சொல்லும் தத்துவம் என்ன?

ஈசனுக்கு நைவேத்தியமாகப் படைக்கப்பட வேண்டிய உண்மையான 'நெல்' எது?

ஜீவகோடிகளின் சரணடைந்த நெஞ்சங்கள்தாம் நெல்! ஈசனின் பிராகாரத்தில் அந்தப் பிராகாரத்தை நம்பி நெல் உலர வைக்கப்பட்டிருப்பதைப்போல், 'சர்வமும் நீயே. என் சக்தியில் எதுவுமில்லை. அமுதுபடி நெல்லைப்போல் நான் என்னை உனக்கு அர்ப்பணிப்பேன்!' என்று இறைவன்முன் ஜீவகோடிகள் சரணடைந்தால், பாவப் பெருமழை வந்து அழிக்க முயன்றிடினும் ஈசன் காத்தருள்வான்!

—இந்தத் தத்துவத்தை உணர்த்தத்தான்—

'பக்தியால் கனிந்த 'நல்' உள்ளங்களுக்கு 'வேலி'யாக நான் நிற்பேன்' என்று மாந்தர் குலத்துக்கு ஒளிபெற விளக்கத்தான்—நெல்லுக்கு வேலி கண்டு அந்தக் காட்சியைக் காலம் காலமாக மக்கள் குலம் நம்பிக்கையோடு நினைத்துக் கொள்ள வைத்தானே, வேதநாயகன்...?

ஈசன் இவ்வாறு மனித குலத்துக்கு அளித்த நம்பிக்கை ஒளியில் அவர்கள் மெய்ஞ்ஞானப் பெருவாழ்வு வாழும் வழியை உணர்த்தும் பணியை ஒருவர் ஏற்றுக் கொண்டார்.

யார் அந்த 'ஒருவர்...?'

வேறு யார்...? எந்த ஓர் அன்னையால் இந்த சர்வ லோகங்களும் சர்வ ஜீவராசிகளும் அருளும் கருணையும் பெற்று உய்கின்றனவோ அந்த அன்னை காந்திமதிதான்!

தேவ அன்னையின் திருப்பாதம்பட்ட அந்த நெல்லையம்பதி புனிதப்படுவதற்காக, தேவதேவியரிடையே ஒரு நாடகம் நடைபெறுகிறது...!

அதன்படி அன்னை நியமித்து நிலைகாட்டிக் காட்டிய உலகியல் அறங்களாவன...

இறைவழிபாட்டுக்கும் இன்ன பிறவற்றுக்கும் பூஞ்சோலை அமைத்தல்; தண்ணீர்ப் பந்தல் தர்மம்; மடம் அமைத்தல்; தடாகம் கட்டுதல்; பசு பாதுகாப்பு; கண்ணாடி சேவை; சுண்ணாம்பு வழங்குதல்; வறியோரின் தலைக்கு எண்ணெய்; கண்நோய்க்கு மருந்து; காதோலை தரல்; பிள்ளைப்பால்; பிள்ளைச்சோறு; பலகாரம்; ஜீவராசிகளுக்கு உணவு; கல்வி பயில்வோருக்கு உணவு; தரித்திரர்களுக்கு இருப்பிடம்; பசுவுக்கு உணவு; அனாதைக்கு அன்னம்; அனாதையருக்கு உடை; அறுசமயத்தாருக்கு உணவு; சிறைச்சாலை அடைந்தாருக்கு உணவு; எல்லாப் பொருளையும் எதிர்பாராமல் இழந்தாரை நிலைநிறுத்தல்; பிறர் செய்த தருமங்களைக் காத்தல்; பிச்சையிடுதல்; திருமணம் செய்வாருக்கு உதவி செய்தல்; பிள்ளைப் பேருக்கு உதவுதல்;

வறியோருக்குத் துணிகளைச் சலவை செய்து கொடுக்கச் செய்தல்; முடிதிருத்துவோரைக் கொண்டு வறியோருக்கு முடி திருத்தச் செய்தல்; அனாதைப் பிணத்தைத் தகனம் செய்தல்; கன்னிகையை தானம் கொடுக்க (திருமணம்) உதவுதல்; பிள்ளைகளை வளர்த்தல்; கொலைபடும் உயிரை விடுவித்தல்...

—இந்த அறங்கள் அனைத்துமே உலகியல் அறங்களே...

இவற்றைச் செயல்படுத்திக் காட்டவே அன்னை உலகில் அவதரித்து தவமியற்றினாள் என்னும்போது...

எந்தக் கண்ணோட்டத்தை நம் மனத்துள் செம்மைப் படுத்த சர்வலோக நாயகி திருவுளம் கொண்டு இத்தலத்தில் அவதரித்தாள் என்று புரிந்து வியக்கிறோம்...

'தெய்வம் தொழுங்கள்; வினைகள் தீரும்' என்று பக்திப் பெருநிலைக்கு வழிகாட்டுவது ஒருவித ஞான வழி...

ஆனால், ஞானாம்பிகையான காந்திமதி தேவியோ இத் தலத்தில் தெய்வம் தொழுவதை வலியுறுத்தியதைவிட அனாதையருக்கும், வறியோருக்கும், குழந்தையருக்கும், ஜீவராசிகளுக்கும் உதவுதலையே பெரும் அறமாக நிலைபெறச் செய்திருக்கிறாள்.

'ஏழைக்கு இரங்குதலே இறைவன் பணிகளுள் பெருமை பெற்றது...! ஏழையின் துன்பத்திற்கு நான் பங்காளியாக இருக்கிறேன்' என்ற அறம் காட்டி அன்னை அருள்புரிந்த திருநெல்வேலித் திருநகரில் நிற்கிறோம்...

வேத மணம்...

தர்ம தேவதை ரிஷபமாய் நின்றுலாவும் பெருமை...

நெல்லுக்கு வேலியாக நின்று, 'நல்லனவற்றிற்கெல் லாம் வேலியானோம்' என்று தேவ—தேவியர் வலியுறுத்திய சீர்மை...

அறம் முப்பத்திரண்டும் கூறி அருள் தேடும் வழிகாட்டி நிற்கும் அன்னையின் கருணை...

அனைத்துப் பெருஞ் சிறப்புக்களும் அகக் கண்ணில் ஒளி பெற்று நிற்க—எந்தாய் காந்திமதியின் தரிசனம் காண, திருநெல்வேலி 'டவுனி'ல் அமைந்துள்ள திருவாலயத்தில் எளிமையாய், அஞ்ஞான ஏழையராய் அணுகி நிற்கிறோம்.

ஃ ஃ ஃ

கரையோரத்திலும், வெளிப்புறத்திலும் அலைகள் சலசலத்துக் கொண்டிருக்க ஆழ்கடல் உட்புறம் அமைதியாக நிறைந்திருப்பது போல்; ஆலயத்தின் வெளிப்புறச் சாலைகளில் அரவங்கள், ஆரவாரங்கள், வாகன ஒலிகள், கூச்சல்கள் எல்லாம் சலசலத்துக் கொண்டிருந்தாலும்...

அம்மை காந்திமதியும் ஈசன் நெல்லையப்பரும் (வேணுவனநாதர், வேய்முத்தர் என்ற பெயர்களைவிட, இத்தலத்தில் ஈசனுக்கு அதிகமாக வழங்கப்பெறும் நாமம் 'நெல்லையப்பர்'தான். 'நெல்'லின்பால் மக்களுக்கு உள்ள லௌகிக ஈடுபாடு காரணமோ...?) ஈடு இணையற்ற கம்பீரத்துடன் திகழும் பழம்பெரும் ஆலயத்துள் ஆதியந்தமில்லா பெரும் பொருளாய் அமர்ந்திருக்கிறார்கள்.

பழம்பெரும் ஆலயம் என்றால்...அதன் பழைமைப் பெருமை சாமான்யமானதா...?

'முழுதும் கண்ட' ராமக்கோனார் மூங்கிலை வெட்டிய போது ஈசன் ரத்தப் பெருக்காய் வெளிப்பட்டபின்—முதன் முதலாய் ஆலயம் அமைத்தவன், அம்மையப்பரின் திருக் காட்சி கண்ட மன்னனான 'முழுதும் கண்ட' ராம பாண்டியன்.

அதன்பின் இந்த ஆலயத்தை இத்துணைக் கம்பீரமாக அமைத்தவர், திருஞானசம்பந்தப் பெருமான்-அப்பர் சுவாமிகள் காலத்தவரான மதுரை மன்னன் 'நின்றசீர்

நெடுமாற' பாண்டியன் (கூன் பாண்டியன்) என்று வரலாறு கூறி நிற்கிறது.

ஆலயப் பிராகாரங்களில் மிகப்பெரியது ராமேசுவர ஆலயம் என்பர். அதற்கடுத்த அளவில் பெரிதாக அமைந் திருப்பது இந்தத் தலத்தில்தான்.

''எழில் வடிவமைப்பில் பெயர் பெற்றது மதுரை மீனுட்சியம்மன் ஆலயம் என்பர்; அதற்கு இணையான எழில் கொண்டிருப்பது 14 ஏக்கர் பரப்பளவில் அமைந்த இந்தப் பழம் பெரும் ஆலயம். தேர்களில் பெயர் பெற்றது திருவாரூர் தேர்... அதற்கு இணையாகப் பெருமை பெற்றிருப்பது 450 டன் எடை கொண்ட இத்தலத் தேர். சமயக்குரவரர் நால்வரில் ஞானப்பாலுூண்ட ஆளுடைப் பிள்ளையாரான திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற இத்திருத்தலத்தில்தான் ஈசன் ஆடிய தாமிரசபையும் அமைந்திருக்கிறது'' என்று தலத்தின் பெருமைகளைப் பெரு மிதத்துடன் கூறிக் கூறி மகிழ்கிருர் ஆலய நிர்வாக அதிகாரி யான திரு. இரா. சிவதேவு.

ஆலயத்தின் சிறப்பு யாவும் அதனை அமைத்தவரின் திறமையின் எல்லைகளே!

ஐந்தெழுத்து மந்திரத்தில் ஆட்சி செய்து நிற்கும் தேவ தேவியர் தேர்ந்தெடுத்துக் குடிகொள்ளும் ஆலயமோ...?

அதோ...

நெல்லையம்பதியில் அன்னையின் சந்நிதியில் ஒரு பொழுது விடிகிறது...

அம்மையப்பரின் 'திருவனந்தல்' பூஜை காண திருநெல் வேலியுறை பக்தர் யாவரும் விரைகின்றனர்.

# 4

## தேவி ஆற்றிய தவம்

அந்தரு தெய்விகக் கைலாயத்தில் தேவதேவியர்களுக்கிடையே ஒரு திருவிளையாட்டு நடைபெறுகிறது.

தெய்வம் குழந்தை உருவில் இருக்கிறது என்பர். அதை மெய்ப்பிப்பதுபோல் ஈசனும் தேவியும் குழந்தைகள் ஆடும் கண்ணுமூச்சி ஆட்டத்தில் லயித்திருக்கின்றனர்.

அந்த விளையாட்டின் பயன், அகிலாண்ட கோடி பிரம்மாண்டமான உலகம் முழுதுமுள்ள ஜீவன்களையும் பாதித்தது. ஈசனும் தேவியும் மாறி மாறிக் கண்ணை மூடித் திறந்ததால் அண்டமெங்கும் ஒளியும் இருளும் மாறி மாறித் தோன்றின.

உணர்வும் மயக்கமும் ஒன்றன்பின் ஒன்ருய்த் தோன்றின. பஞ்ச பூதங்களின் இயக்கங்களின் தேக்கத்தால் ஜீவகோடிகளின் ஐம்புலன்களும் செயலற்றன.

எங்கும் பதைப்பு, குழப்பம், பரதவிப்பு, சர்வலோக இயக்கமே இவ்வாறு ஸ்தம்பித்துக் குழம்பியதும், பிரம்மாதி தேவர்கள் பதறிப்போய் கைலாயத்துக்கு விரைந்து தேவ தேவியர்முன் பணிந்து, ''அம்மையப்பர்களே, தங்கள் திருவிளையாட்டால் அகில உலகும் செயலற்றுப் பதைத்து நிற்கின்றன. வேத ஞானங்கள்கூட ஒளி மாறிப் பேதலித்துப் போய்விட்டன. தேவதேவியரான தாங்களே இந்த உற்பாதத்துக்குக் காரணமாகலாமா?'' என்று கூறிக் கலங்கி நின்றனர்.

உமாமகேஸ்வரன் கம்பீரமாகப் புன்னகைத்தவாறு, ''குற்றத்தை ஏற்றுக் கொள்கிருேம். பிழை ஒன்று நேர்ந்தால் பிராயச்சித்தம் ஒன்றும் செய்தாக வேண்டும்

எங்களில் யார் குற்றவாளியோ அவர் பிராயச்சித்தம் செய்கிறோம்!'' என்றார்.

''இதென்ன விபரீதம்! தேவதேவியர் பிராயச்சித்தம் செய்வதா?'' என்று பிரம்மாதி தேவர்கள் துடித்தனர்.

''கலங்காதீர்கள்... பாவியர்கள் பிராயச்சித்தம் செய்தாலே நலம் சேரும். பகவானோ பார்வதியோ பிராயச்சித்தம் செய்தால்...?'' என்று கேட்டுப் புன்னகை புரிந்தார் தேவதேவன்.

அவருடைய திருவுளத்துள் மறைந்திருந்த தெய்விக மர்மத்தை உணர்ந்தும் உணராதவராய் மயங்கி நின்றனர் பிரம்மாதி தேவர்கள்.

அச்சமயம் சர்வேசுவரன் பார்வதியை நோக்கி, ''மலை மகளே, நம்மில் பிராயச்சித்தம் செய்யும் அளவு குற்றம் புரிந்தவர் யார்?'' என்றார் புன்னகையுடன்.

''ஈசனே, தங்கள் கேள்வியே தவறானது. நாமிருவரும் சேர்ந்து விளையாட்டில் ஈடுபட்டிருந்தபோது இருவரில் யாரைப் பிரித்துக் குற்றவாளியாகக் கூறுவது? அதனன்றியும் நாம் இருவரும் ஒருவருள் ஒருவராய் - சிவசக்தி சங்கமமாய்க் கலந்திருக்கும்போது குற்றத்திற்காக ஒருவரைப் பிரிப்பது எப்படி முடியும்? இந்தக் கேள்வியைச் சற்று மாற்றிக் கேளுங்கள், தேவா?''

''என்ன சொல்கிறாய்?''

''நம் இருவரில் யாருக்கு பிராயச்சித்தம் செய்யச் சென்றால் லோகத்துக்கு சுபிட்சம் கிடைக்கும்? அதை அருளும் வல்லமை யாருக்கு உண்டு? என்றுதான் தாங்கள் கேட்டிருக்க வேண்டும்...அந்தப் பொறுப்பை நானே ஏற்றுக் கொள்கிறேன்...!'' என்றாள் லோகமாதா.

''அப்படியாயின் எம்மால் அந்த பொறுப்பை நிறைவேற்ற முடியாது என்கிறாயா?'' என்று புன்னகைத்தார் ஈசன்.

''நான் தொடங்கி வைக்கிறேன். தாங்கள் நிறை வேற்றி வையுங்கள்!'' என்ருள் உலகநாயகி.

''பிராயச்சித்தமாக என்ன செய்யப் போகிரும்...?'' என்று வினவினுர் தேவதேவன்.

''பூமிக்குப் போய் தவமியற்றப் போகிறேன்...!''

எந்தப் பாதங்களைப் பற்றத் தவங்கள் இணைந்து அருந் தவம் புரிய வேண்டுமோ, அந்தப் பாதங்களுக்குரிய பார்வதியே தவம் புரிவதா?''

''தவம் என்ருல் என்ன என்று மாந்தராம் ஜீவாத்மாக் களுக்கு உணர்த்த நான் தவம் செய்யப் போகிறேன். அந்த விளக்கம் இருளிலும் ஒளியிலும் ஒருசேர அவர்களுக்கு வழி காட்டி நிற்கும். துன்ப இருளில் அந்த விளக்கம் அவர் களுக்குத் தெம்பூட்டும்... தன் வாழ்வின் வெளிச்சமான காலங்களில் அந்த விளக்கம் அகந்தையை அடக்க உதவும்...''

''அதற்கு நீயே செல்லவேண்டுமா தேவி?'' ஈசன் கேட்டார்.

''நான்தான் செல்லவேண்டும் தேவாதி தேவா!... தாய் ஊட்டும் திருமுலைப்பால்தான் ஒரு சேய்க்கு முழுமுதல் ஆதாரம்; நான் ஊட்டும் ஞான அமுதுதான் மாந்தரைக் கடைத்தேற்றும்!'' என்ருள் அன்னை.

மின்னல் ஜோதியாய்ப் புன்னகைத்தார் தேவதேவர்.

''தேவி, உன் எண்ணம் நிறைவேறுக. எந்தத் தலத் துக்குச் சென்று தவமியற்ற விரும்புகிருய்??'

''ஏற்கனவே தாய்மையும் ஞானமும் பெருகியிருக்கும் ஒரு தலம்!'' என்ருள் அன்னை.

''விளக்கிக் கூறுவாய் தேவி!'' என்ருர் ஞான முதல்வர்.

''வேதங்கள் மூங்கிலாக வளர்ந்து ஈசனையே பிள்ளையாய்ப் பெற்று 'வேய்முத்தர்' என்றும் 'வேணுவன நாதர்' என்றும் சீராட்டிய அபூர்வத் தாய்மை சிறந்த தலம்; நெல்லுக்கு வேலிக்காலாய் நின்று நெல்லையப்பராக ஈசன் நின்ற தலம்; இந்த அபூர்வ ஞான பூமியினும் எத்தலம் உயர்ந்தது?''

## 5

திடீரென்று எங்கும் பேரின்பக் கோலாகலம்...

தண்மைசீர் தாமிரவருணி நதியோட்டத்தில் என்று மில்லா பூரிப்பு... புதுவேகம்...

அதன் எழில் தீரமெல்லாம் ஞான மணம் வீசுகிறது... வேகம் கொண்ட அதன் அலைகளெங்கும் வேதகீதம் முழங்கு கின்றன.

அந்தக் கீதகானத்துடன் விஞ்சயர் கின்னரர் கிம்புருடர் இன்னபிற தெய்விக இசை ஞானியரின் கானங்களும் கலந்து ஒலிக்கின்றன...

வடக்கே காஞ்சியில் ஒரு கம்பா நதி காமாட்சியம்மை யின் தவத்துக்குக் காத்திருந்ததுபோல், ஓர் அரிய தவப் பெருமை பெற அந்தத் தென்புலத்து தாமிரவருணி தீரத் திலும் ஒரு கம்பா நதி காத்திருக்கிறது. திடீரென்று பிரண வத்தின் சங்கநாதம் அண்டப் பெருவெளியெங்கும் ஆனந்த மயமாய் ஒலிக்கிறது... அக்கணமே அந்தக் கம்பா நதி யெங்கும் ஜோதிப் பிரகாசமாய் ஒளிர்கிறது.

நீர்ப்பரப்பெல்லாம் மலர்க்காடாக நிறைந்து பூரிக் கின்றன.

ஆம்; அங்கே அந்த அற்புதம் நிகழ்கிறது.

வல்லமை ஒரு விழிவீச்சாய் மின்ன, சொல்லறு ஞானமே ஒரு ஜோதிச் சுடர் புன்னகையாய் ஒளிர, வாய்மை ஒளி அவள் வதனத்துத் திலகமாய் ஜொலிக்க, தாய்மையெனும் கதவு அவள் தாமரைச் சீரடித் தத்துவ மாய் தரணியெங்கும் பரவ - வானுறையும் எம் அம்பிகை வடிவழகுக்கோர் இலக்கணம் வகுத்து, வடிவுடை மங்கை யாய் காந்திமதி எனும் பெயர் துலங்க—கம்பா நதி யோரத்தில் கருணைத்திரு தவக்கோலம் பூண்டு காட்சி தந்தாள். அவளுடைய திருநடை கொண்ட ஒயில்வீச்சிலே நாலு வேதமும் ஆர்ப்பரித்தன.

அன்னை சிந்திய அருட்சிரிப்பில் ஆறு சாஸ்திரங்களும் அறுபத்து நான்கு கலைகளும் அமுத ஒளியாய் மின்னின.

அண்டசராசரங்களும், அனைத்துலக ஜீவகோடிகளும் பேரானந்தப் பெருவெளியில் துய்த்து நிற்க - எம் அன்னை யாம் சர்வலோக நாயகி தென்காஞ்சியெனும் பெயர் பெற்ற திருநெல்வேலி திருத்தலத்தில்—தென்புலத்து கம்பா நதியோரம் அருட்தவம் மேற்கொண்டாள்...

அன்னை செய்த அருட்தவம் என்ன...?

ஐம்புலன் ஒடுக்கி பிரணவம் ஓதி பேரின்ப ஒளி விகசிக்கச் செய்யும் தெய்விகத் தவமா அது?

இல்லை... அன்னை இத்தலத்தில் செய்த தவம் மற்றைய தவங்களிலிருந்தும் மாறுபட்டது. இது குறைபட்ட மாந் தருக்கு வழிகாட்டி நிற்கும் அறன்வழிப்பட்ட தவம்...

ஆம்; மண்ணில் பிறந்த மாந்தர்குலம் எத்தகைய தவங் களைச் செய்து உய்வுபெற வேண்டும் என்பதை அவர்களுக்கு அன்னை விளக்கி; அதைத்தானே செயல்படுத்திக் காட்டிய அறத்தவம் தான் அங்கு அன்னை காந்திமதி புரிந்த தவம்

## 6

## காந்திமதித் தாயின் கருணை கடாட்சம்

தந்தையிடம் ஏதாவது கூற வேண்டுமா...? தேவை யானவற்றைப் பெற வேண்டுமா...? எதற்காயினும் தாயின் மூலம் தூது செல்வது என்பது பாலவயதிலிருந்தே நம்மிடம் படிந்து விட்ட பழக்கம்.

நமக்கு வேண்டுபவற்றை பரிவோடு புரிந்துகொண்டு— பக்குவமாகத் தந்தையிடம் எடுத்துக்கூறி பெற்றுத் தருபவள் அன்னை என்ற உள்ளுணர்வு நம்மிடம் ஊறி நிற்பதுதான் அதற்குக் காரணம்,

அன்று, அன்னை காந்திமதியின் சந்நிதியில் — திருவனந் தல் பூஜையின்போது அதை அறிந்து கொள்ள நேர்ந்த போது...

நெடிய விதானம் கொண்ட அந்த நீடுபுகழ் நெல்லை யப்பர்— காந்திமதி அம்மன் திருவலாயப் பிராகாரங்களும், ஈசனின் சந்நிதிக்கும்—அன்னை காந்திமதியின் சந்நிதிக்கும் இணைப்பாகத் திகழும் சங்கிலி மண்டபமும் சக்திப் பெரு முழக்கத்தால் கனிந்து நிற்க அன்னையின் ஆலயத் திருக் கதவம் திறக்கிறது.

அன்னையின் சந்நிதிக்கு வடபுறமாக அமைந்துள்ள பள்ளியறை மண்டபத்தில் தூங்காத துயில் கொண்ட ஐயனையும் — லோகநாயகியையும் திருப்பள்ளி எழுச்சி செய்து திருக்காட்சி காணபக்தர் பெருங்கூட்டம் உணர்ச்சிப் பெருவேகத்துடன் குழுமி நின்கின்றது.

ஆலயத்தில் நடைபெறும் முதல் பூஜையே அன்னையின் சந்நிதியில்தான் நிகழ்கிறது.

பள்ளியறைக் கதவுக்குத் தூபதிப ஆராதனை செய்கிறார் சிவாசாரியரான சிவஞான பட்டர். (சர்க்கார் பட்டர் என்றும் அவருக்குப் பெயர்.)

பூஜை முடிந்ததும் கதவுகள் திறக்கப்படுகின்றன.

மறுகணம் அம்மையப்பர்கள், சொக்கரும் மீனாட்சியு மாகப் பள்ளியறைத் தரிசனம் தருகின்றனர்.

தெய்வத் தம்பதியரைத் தரிசித்து நின்ற அருட்கூட்டம் ஆனந்தப் பரவசமடைந்து நிற்கின்றனர்.

அம்மையப்பர்கள் அரிதுயில் கொண்டிருக்கும் ஊஞ்சலை மெல்ல அசைத்து ஆட்டுகிறார் சிவாசாரியர்.

மெல்ல மெல்ல பயபக்தியுடன் இறைவனையும் என் அம்மையையும் துயிலெழுப்புகிறார்களாம்!

'கண்ணின் ஒரு செல்வமாம் கையறு நிலையில் வந்துள்ள எங்களைக் கண்திறந்து பார்ப்பீர் 'கைலாயநாதா! அன்னை மீனாட்சியோடு அருளாய் அமர்ந்த ஜோதி! 'சொக்கேசப் பெரும...!' என்று போற்றி நிற்கிறார்கள் பக்தர்கள்.

''பள்ளியறைகளில் எல்லாம் ஈசனுக்கும் தேவிக்கும் 'சொக்கேசரி — மீனாட்சி' என்று பெயர்!'' என்கிறார் சிவ ஞான பட்டர்.

ஏன்...?

மாந்தர்கள் கண்ணோட்டப்படி உலகியல் போகியபாக் கிய சுகங்களுக்கு நாயகமாகத் திகழ்பவர்கள் அரசனும் அரசியும்.

இறைவன் அவதாரங்களில் ஆட்சிப் பெருமை பெற்ற வர்கள் மதுரையம்பதி ஆண்ட அன்னை மீனாட்சியும் அழகு சுந்தரேசரும் அல்லவா? அதனால்தான் பள்ளியறை கொள் ளும் அம்மையப்பர்களை 'சொக்கேசர்—மீனாட்சி' என்றே அழைத்து மகிழ்ந்தனர்.

மேளதாளங்கள் ஆர்ப்பரிக்க, வேத கோஷங்கள் முழங்க, பக்தர் திருக்கூட்டம் நெகிழ்ந்து நிற்க தேவ—தேவியின் பள்ளியறை திருப்பூஜை, நடக்கிறது. திருப்பாத உருவிலிருந்த லோகமாதா, காந்திமதி அம்பாளின் கருவறைக்குள் ஏகுகிருள்...

பள்ளியறையிலிருந்த தேவி, கருவறையிலிருக்கும் மூல மூலவருடன் ஐக்கியமானதும், தூபதீப ஆராதனைகளுடன் திருவனந்தல் பூஜை நிகழ்கிறது.

அச்சமயம் பக்தர் கூட்டத்திலிருந்து ஒரு குரல். நெல்லை ஆயத்த அணிகல அங்காடி உரிமையாளர்களில் ஒருவரான திரு. மு. சு. சங்கர். அன்னையை நோக்கி நெகிழ்ந்துருகிப் பாடுகிருர்:

சலபட்டடைச் சொக்கநாதப் புலவர் பாடியருளிய இந்த மதுரமான பாடலில் தான் என்ன நயம். என்ன மணம்...!

அதன் பொருள் இதுதான்:

'திருநெல்வேலியில் வீற்றிருக்கும் வடிவாம்பிகையாகிய காந்திமதி தேவி! ஆய்ந்தெடுத்த முத்துக்களால் அமைந்த பந்தலுக்குக் கீழே உள்ள மெல்விய படுக்கையின்மீது நீ அமர்ந்திருக்க, உன் அருகே சிவபெருமான் வந்து அமர்ந்து, 'தேவி, நீ ஒரு முத்தம் தர வேண்டும்!' என்று உம்மிடம் கொஞ்சும் அந்த நளினமான வேளையில், 'வேய்முத்தரான, ஈசனிடம் மெல்ல, நயமாக உன் பிள்ளைகளான எங்களுடைய குறைகளை எடுத்துக் கூறினுல் உன் வாய் முத்து சிந்தி விடுமோ, தாயே...!'

இந்தப் பாடலில் சிந்தும் நயம், சுவை அம்மையைத் தூது பேச வைத்துக் காரியம் சாதித்துக் கொள்ளத் துடிக்கும் சாமர்த்தியம்... அதுவும் எந்த வேளையில் சொல்ல வேண்டும் என்று அம்மைக்கே ஆலோசனை கூறும் சாதுரியம்... அடடா!

தொற்றியிருக்கும் தொல்வினைகள் நீங்கவோ, துய ருற்ற உள்ளம் நிறைவுறவோ, ஈசனின் அருள்பெற்று உய்யவோ, எதற்காயினும் — ஜீவ கோடிகள் தொழுது பற்றி நிற்கும் பொற்பாதங்கள் நம் லோகாம்பிகை காந்திமதியின் திருப்பாதங்கள்தானே...

''ஆம்... அன்னையின் பாதம் பற்றித் தொழுதுதான் என் பாவப் பிணி நீங்கினேன்!'' என்கிறார். ஆலயத்தில் நாதஸ்வர சேவை செய்து கொண்டிருக்கும் திரு. சின்ன சுப்பையா.

நெல்லை மாவட்டத்தில்புகழ்பெற்ற நாதஸ்வரக் கலைஞர் களுள் ஒருவர் சின்ன சுப்பையா. காருக்குறிஞ்சி அருணாசலம் அவர்களின் சீடர்.

அவருக்குத் திடீரென்று ஒரு சமயம் பக்கவாதத்தால் கை — கால்கள் செயலிழந்து போய்விட்டன. அவருடைய ஜீவநாடியான நாதஸ்வரத்தைக்கூடத் தொட்டு வாசிக்க முடியாத சோதனை... கால்கள் சுவாதீனமிழந்து நடக்கவும் முடியவில்லை. வைத்திய முயற்சிகள் பயனற்றுப் போய் விட்டன. கடைசியில் அவர் பற்றிக் கொண்டது காந்தி மதியின் பொற்பாதங்களைத்தான்...

அன்னையின் சந்நிதிக்கு அவரை அழைத்து வந்து சேர்த்தனர்...இரவு பகல் அவள் சந்நிதியில் கண்ணீர் சிந்தி கரைந்துருகினார்...அவளுடைய கடைக்கண் திருப்பார்வை அருள்கோரித்தவம் கிடந்தார்...

ஒவ்வொருவரும் அன்னையின் சேவைக்காக ஓடியாடித் திரியும் போதும் அவர் உருகியழுதார்...'அம்மையே நான் உன் சேவைக்கு ஆளாகி ஓடித்திரிய வாய்ப்பு தரமாட்டாயா நாதத்தால் உன்னை பூஜிக்க எனக்கொரு நற்கதி அருளாயா...?'

அன்னை அருள் சுரந்தாள்...ஆய்முத்துப் பந்தரின் கீழ் வேய்முத்தரோடு ஞானவிளையாட்டில் திளைத்திருந்த போது,

தன் ஆலயமுற்றத்தில் கண்ணீர் சிந்தி நின்ற சேய்க்கு நற்கதி அருளச் செய்தாளோ...

மூன்றே மாதத்தில் படிப்படியாக துன்பம் நீங்கப் பெற்ருர் அந்த நாதஸ்வரக் கலைஞர்...

''கார்த்திகை மாதம் முப்பது நாளும் ஈசன் திருவனந்தல் பூஜையின் போது தங்கப் பல்லக்கில் புறப்பாடு நடத்துவார். அந்தக் காட்சியைக் காண்பதற்குக் கண்கள் கோடி வேண்டும்!'' என்று மெய்யுருகக் கூறுகிருர் சைவ சமய நெறியாளரும், பல சமய நூல்கள் வெளியிடுவதைப் பணியாகக் கொண்டவருமான 'காசுமணி' என்ற திரு. சே. சுப்ரமண்யம் (கல்லத்தி முடுக்குத் தெரு, திருநெல்வேலி.)

சுவாமி சங்கிலி மண்டபத்தைக் கடந்து கொண்டிருக்கும் போது, அங்கிருந்த ஒரு சிற்பம் நம் கவனத்தைக் கவருகிறது.

அதுதான் எந்தத் தலத்திலும் இல்லாத பெருமையாய் இத்தலத்தில் மட்டும் இருபத்தியொரு ஆவுடையார்கள் கொண்ட லிங்கேசுவரனுய் ஈசன் திருக்காட்சி அருளிய தோற்றம்.

அதுபற்றிய தெய்விகத் திருக்கதை நம் நினைவுக்கு வருகிறது. அந்த நினைவு தந்த உணர்வெழுச்சியில் மெய் மறந்து மனம் கிளர்ந்து நிற்கிருேம்...

## 7

அன்று தாமிரவருணி நதித்தீரம் தான் செய்த தவத்தால் தனிப்பேறு பெற்ற நாள்.

ஆம்; மூங்கில் காட்டிற்குள் ஒரு முத்தாய் விளைந்து...

வேய்முத்தராய், வேணுவனநாதராய் அருள்சோதி துலங்கத் தோன்றி, அந்த நதித்தீரத்தையே கருணை வெள்ளத்தால் நிறைவித்த தேவதேவன்—

மாந்தராம் ஜீவகோடிகளுக்குத் தம் மகிமையை வெளிப் படுத்த திருவுளம் கொண்டு—அரண்மனைக்குப் பால்குடம் சுமந்து சென்ற ராமக்கோனுனின் பாலைத் தட்டிவிட்டதன் மூலம், மன்னன் ராமபாண்டியனின் கவனத்துக்கு தம் இருக்கையை உணர்த்தி, அவனைத் தம் பணிக்கு ஆளாக்கிய அந்த வரலாறு நிகழ்ந்தபோது, இன்னுமொரு அற்புதமும் நடந்தது...

ராமக்கோனுன் மூங்கிலை வெட்டியபோது மூலலிங்கமும் வெட்டுப்படவே, எங்கும் இரத்தக் காடாக மாற—அது கண்டு பதறிய ராமக்கோனுன் அரசனை அழைத்துவந்து அந்த அற்புதத்தை காட்டியதும்...

மன்னன், 'ஈசா, புதருக்குள் மறைந்திருந்த உன் திருக் கோலத்தை அறியாத ராமக்கோனுனை வெட்டினுன்... இல்லை...அவனை அப்படி வெட்டும்படி தூண்டியவன் நானே...!'' என்று அழுது புலம்பினுன். ராமக்கோனுனும் அருகிலிருந்து அரற்றினுன்.

ஈசனின் திருவுருவத்திலிருந்து ரத்தம் பெருக்கொடுத்து ஓடுவதைப் பொறுக்காத மன்னன் பேதைமைப் புலம் பலுடன் ரத்தப்பெருக்கை தன் கரங்களால் துடைத் தெறிந்தான்.

என்ன அதிசயம்! ராமபாண்டியன் கரம் பட்டதும் ரத்தப்பெருக்கு நின்றது! குழந்தையின் கரம் பட்டதும் அன்னையின் முகத்தில் மலர்ச்சி தோன்றுவதுபோல் மாந்த ரினத்துச் செல்வனுன ராமபாண்டியன் உள்ளமுருகித் தொட்டதும், சுயம்புலிங்கமாக இருந்த ஈசன் சுந்தர மலர்ச்சி பெற்று ஒளிர்ந்தான்.

அதுகண்டு மகிழ்ந்த ராமபாண்டியன், ஆனந்தப் பரவச மாகித் தொழுது, ''ஆதியே, அடியேனுக்கருளி இப்பெருங் காட்சி தந்த பெம்மானே! இந்த வியனுலகம் கடைத்தேற, உன் தரிசனம் காட்டியருள வேண்டும்...விரிசடை முதல்வா!'' என்று போற்றித் துதித்தான்.

உடனே பெருமான் எங்கும் பேரொளி பரவ ஜோதி சொரூபலிங்கமாய்க் காட்சியளித்தான்...

அதுகண்டு பூரித்த ராமபாண்டியனின் மனத்துள் இன்னும் பேரின்பப் பேராசை எழுந்தது. திகட்டாத அமுதினை வெறிகொண்டு மேலும் மேலும் அள்ளி அள்ளி அருந்தும் ஆர்வம் போல், ஈசனின் ஜோதி உருவைக் கண்டும் மனம் அமைவுறாத ஆசை வேகத்துடன், ''இறைவா உன் ஒளி கண்ட எமக்கு உன் வானுயர்ந்த உருவ எழிலையும் காட்டியருளல் வேண்டும்!'' என்று வணங்கி நின்றான்.

மறுகணம் மூவுலகமும் வியந்து அதிர, விண்ணவர்கள் போற்றிச் சூழ்ந்து பூமாரி பெய்து நிற்க, ஈசன் வளரத் தொடங்கினான்...

ஈசன் நிமிர்ந்து வளர்வது கண்டு, மன்னன் அடுக்கடுக்காய் தொடர்ந்து பீடங்கள் போடத் தொடங்கினான். அப்போதும் பெருமான் வளர்ந்து கொண்டேயிருந்தார். இவ்வாறு சுமார் இருபத்தியொரு பீடங்கள் பொட்டும் வளர்ச்சி அடங்காது உயர்ந்து எழுந்த ஈசனின் திருவுருவ வளர்ச்சியைக்கண்டு அதிர்ந்த மன்னன்,

''பெருமானே, உம் பெரும் வளர்ச்சியைத் தாங்கும் சக்தி எமக்கில்லை. இனிமேலும் நீர் வளர்ந்து கொண்டே போனால் உமக்கு பூஜை செய்யும் ஆற்றல் இப்புவிமாந்தருக்கு இல்லாது போகும். எனவே, அடியார்கள்பால் கருணை கொண்டு, நும் தளர்ந்தோங்கிய திருவுருவைக் குறுகச் செய்து கொள்ளல் வேண்டும்!'' என்று நிலமிசை விழுந்து தொழுதான்.

அவன் வேண்டுகோளுக்கு இசைந்தவராக, வளர்ந்தவாறிருந்த விரிசடைக்கடவுளும், தம் மாணிக்க ஒளி சிந்தும் மகாலிங்க சொரூபத்தைக் குறுக்கத் தொடங்கினார். ஆனால், நெடிதுயர்ந்த அந்தத் திருக்கோலம் குறுகும் காட்சியைக் காணப் பொறுக்காத கோவேந்தன் கொடுவாள் கொண்டு தம் கழுத்தை அரிந்து கொள்ள முயன்றான்.

தம் பிள்ளை மனத்து பேதைமையால் தம் ஆற்றல் மிக்க பேருருவைக் கண்டும் காண சக்தியற்றுத் தடுமாறிய மன்னனைக் கண்டு கனிவு சிறக்க நகைத்தார் கைலாயநாதர். அந்தக் கனிவுப் பெருநகையே ஒரு கரமாக நின்று, தன் தலையை தானே கொய்துவிட முனைந்த அவனது கொடும் வினையைத் தடுத்து ஆட்கொண்டது. வியப்புற்று நிமிர்ந்த நான் மன்னனும்...

இதுவரை மகாலிங்க உருவில் இருந்த சர்வேஸ்வரன், விடையேறிய பெம்மானுய், எம் அன்னை வேதவல்லி துணையிருக்க திருக்காட்சி தந்தார்.

ஃ ஃ ஃ

## மாதா மஞ்சனவடிவு அம்மன்

இந்த தெய்விகத் திருவரலாற்றின் நினைவு நம் மனத்தில் உந்த, சங்கிலி மண்டபத்தில் சிலாவடிவாய் இருந்த இருபத்தோரு ஆவுடையார் அமைந்த மகாலிங்கத்தைத் தரிசித்து மெய்மறந்து நிற்கிறோம்.

சர்வேஸ்வரனின் அந்தப் பேராற்றல் மிக்க திருவுருவைக் கண்டு மெய்மறந்து நின்றபோது, ஆலய நிர்வாகி, ''சங்கிலி மண்டபத்தில் ஆற்றல் மிக்க ஈசனின் திருவுருவம் மாத்திரம் அல்ல...அன்னை உமையவளின் ஒரு சக்தி வாய்ந்த அம்சமும் இங்கே அருள் இருக்கை கொண்டிருக்கிறது. அதோ பாருங்கள்!'' என்று சுட்டிக் காட்டினுர்கள்.

அங்கே பெரும் திரளாகப் பெண்டிர் தொழுது நிற்க, சந்நிதி கொண்டு நிற்கிருள். 'மஞ்சன வடிவு அம்மன்' என்ற திருநாமம் கொண்ட துர்காதேவி. ''இந்த கொற்றவை தேவிக்கு வெள்ளிக்கிழமை இராகு காலத்தில் அர்ச்சனை செய்தால், திருமணம் ஆகாத பெண்களுக்குத் திருமணம் ஆகும். மகாவல்லமையோடு வேறு எங்குமில்லாத ஒரு சிறப்புடன் இங்கு அமர்ந்திருக்கிருள் துர்காதேவி'' என்கிருர் சிவஞானபட்டர்.

ஆதிபராசக்தியின் வல்லமை மிக்க வீரிய அம்சமே துர்க்காதேவி என்பர்.

எத்தலத்திலும் துர்க்காதேவி உக்கிர நாயகியாகவே இருக்கை கொண்டு தீச்சுடராய் அருள்பாலித்து வருவாள்.

தீவினைகளை வெல்லும் சூலாயுதத்தை ஏந்தி, சூது பொய்மை கண்டு சுடர் வீச நோக்கும் கோபாவேசக் கண்களுடன் அவள் காட்சி தருவதுண்டு...

ஆனால் திருநெல்வேலி தலத்தில் திருமஞ்சன வடிவு அம்மனுக சங்கிலி மண்டபத்தில் வீற்றிருக்கும் கொற்றவை தேவியோ, தன் சூலாயுதத்தைக் கீழ் நோக்கிப் பிடித்தவளாக—நிக்கிரக கோலம் நீக்கி—கருணை வடிவாய் அருள் பாலித்து நிற்கிருள்.

இத்தகு புதுமை காரணமாகவே, அந்தக் கொற்றவை சந்நிதி குளுமை மிக்க மங்கல சாம்ராஜ்யமாகத் திகழ்கிறது.

S

தெய்வம் மனிதர்களை சோதிக்கும் என்பார்கள்.

''தெய்வத்தையே ஒரு மனிதர் சோதித்த புதுமையும் அங்கு நிகழ்ந்திருக்கிறது!'' என்கிருர் நிர்வாக அதிகாரி.

யார் அந்த மனிதர்...?

அவர்தான் கருவூர்ச் சித்தர்! என்று மகாப் பெருமையுடன் கூறுகிருர் அவர்.

கருவூர்ச் சித்தர் ஒருமுறை திருச்செந்தூரில் பால சுப்ரமண்ய பெருமானைத் தரிசித்துவிட்டு திருநெல்வேலிப் பக்கம் வந்து கொண்டிருந்தாராம்.

அப்போது நன்ருக இருட்டிவிட்டதாம். அப்போது வழியில் யாரோ திருடர்கள் நகை களவாடிப் போக,

அநியாயமாகக் கருவூர்ச் சித்தர் பழிக்குள்ளாகி, துன்புறுத்தப்பட்டாராம். அப்போது. 'நெல்லையப்பா, காப்பாற்று'' என்று குரல்கொடுத்து இறைவன் சந்நிதி நோக்கி அழுதாராம்.

நெல்லையப்பரோ ; உடனே அவருடைய உதவிக்கு வரவில்லையாம். உடனே மனம் குமுறிய சித்தர், 'இத்தலத்தில் எருக்கும் குருக்குமாக முளைக்க!' என்று சாபமிட்டு விட்டு அருகிலுள்ள மானூர் அம்பலத்தில் போய் அமர்ந்தாராம்.

அவருடைய சாபம் பலிக்கத் தொடங்கவே, ஈசன் அவரிருப்பிடம் சென்று தரிசனம் தந்தாராம்.

அதன்பின் சமாதானம் அடைந்த சித்தர், 'எருக்கு இங்கே (மானூரில்): ஈசன் அங்கே (நெல்லையில்)' என்று தன் சாபத்தை மாற்றி அமைத்தாராம்.

வேடிக்கையான கதையாக இருக்கிறது.

இருந்தாலும் அதனுள்ளிருக்கும் தத்துவம்...?

'எல்லாம்வல்ல ஈசனையும் தண்டிக்கும் வல்லமை பெற்றது, அந்த ஈசனின் பால் பற்று கொண்ட பக்தி!' என்பதற்காக இத்தகு செவிவழிக் கதை கூறப்படுகிறதா...?

## 9

தெய்வத்தை வழிபட எத்தனையோ நியமங்களை மனிதர்கள் வகுத்திருக்க...

இல்வாழ்வில், ஒரு மனைவி கணவனை உபசரித்துப் போற்றும் நியமம் ஒன்றை உச்சிகால பூஜையின்போது அன்னை காந்திமதி நிலைநாட்டிக் காட்டுகிருள்.

அதோ...

உச்சிக்கால வேளை...அம்பாள் அவசர அவசரமாக ஸ்நானம் செய்கிருள்.. ஆம்; அன்னைக்கு அபிஷேகம் நடக்கிறது.

முதல் (ஸ்நானம்) அபிஷேகம் காலையில் திருமஞ்சன வேளையில் ஆயிற்று. தாமிரவருணி குறுக்குத் துறையிலிருந்து திருமஞ்சன நீர் யானை பரிவாரங்களுடன் கொண்டு வரப்பட்டு, கால சந்திக்கு முன், முதல் அபிஷேகம் நிகழ்ந்தாயிற்று.

இப்போது உச்சிக்கால வேளை அபிஷேகம்—பக்தர்களுக்கு மாத்திரமல்ல; ஈசுவரனுக்கே ஒரு புதிய பெருமிதத்தையும் உற்சாகத்தையும் ஊட்ட வல்லது. காரணம் சங்கிலி மண்டபம் தாண்டியிருக்கும் ஈசனைச் சந்திக்கப் போகிறாள் அன்னை.

ஏன்...? கவனித்துக் கொண்டிருந்தால் காரணம் தெரிந்துவிடப் போகிறது...

அபிஷேகம் முடிந்ததும் அம்பாளுக்கு ஆராதனை, நைவேத்தியம் நடக்க வேண்டுமே... அது அப்போது நடைபெறவில்லை.

ஆனால் அதற்கு மாறாக, அன்னை நைவேத்திய உணவுத் தட்டுடன் ஈசனை நோக்கிப் புறப்படுகிறாள்.

ஆம்; சாதம்—துவரம் (பொரியல்) —ஒரு குழம்பு—நெய்—பருப்பு இவை அடங்கிய 'பள்ளய அனழப்பு'டன் மேளதாளங்கள் முழங்க அன்னை புறப்படுகிறாள், ஈசனுக்குத் திருவமுதூட்ட!

அன்னையே புறப்பட்டுச் செல்கிறாள் என்று உணர்ந்த ஈசுவரியின் பாவாடையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு, சிவாசாரியார் புறப்படுகிறார்.

(திருவானைக்கா அகிலாண்டேசுவரி ஆலயத்தில் அம்மனின் பட்டாடையை அணிந்து கொண்டு பூஜை செய்யச் செல்வதுபோல்—இங்கு தேவியின் பாவாடையை சுற்றிக்கொண்டு பட்டர் புறப்படுகிறார்.)

மேளதாளங்கள் முழங்க, தீவட்டி பரிவாரங்களுடன் தேவி ஈசன் சந்நிதிக்குப் பிரதட்சணமாகச் செல்கிறாள்.

அன்னை உருவிலிருக்கும் அர்ச்சகர் ஈசன் சந்நிதிக்குச் சென்று, ஈசனுக்கு அபிஷேகம் செய்கிறார்.

ஆம்; ஐயனை அன்னை குளிப்பாட்டுகிறார்! (இதில் எத்துணை லளிதமான தாம்பத்திய உறவுநிலைகூட சொல்லப் பட்டிருக்கிறது, மாந்தர்களின் லோகாயதரசனைக்கு! இதில் அடங்கியுள்ள பேரின்ப தத்துவம் வேறு விஷயம்.)

அதன்பின் தான் கொண்டுவந்த உணவை ஈசனுக்குப் படைத்து ஆராதனை செய்கிறாள் அன்னை. அதாவது ஈசனுக்கு அமுதூட்டுகிறாள்.

இறைவனுக்கு நைவேத்தியம் ஆனதும் தேவி தன் சந்நிதிக்குத் திரும்புகிறாள்.

அதன் பின்னரும் அன்னை ஆற்றும் பணிகள் இருக்கின்றன. இறைவனுக்குத் திருவமுது ஊட்டிய பின், பரிவாரத் தேவதைகளுக்கும் நைவேத்தியப் பூஜையாகிறது. அதன் பின்னரே அன்னையின் சந்நிதியில் பூஜை!

ஆம்; இறைவனுக்கும், மற்ற பரிவாரங்களுக்கும்தானே அமுதூட்டிய பின்னரே அன்னை அமுது ஏற்கிறாள்...

எத்தலத்திலும் அன்னை ஆற்[illegible]நீகம் இது.



## 10

### திருக்கல்யாணம்

ஒரு வேடிக்கையான சூழ்நிலை.

மனிதர்கள் உலக வாழ்வில் விரதமிருக்கலாம். ஆண் பெண்ணிடமிருந்து இச்சையை விலக்கி இருக்கலாம். பெண் ஆணிடமிருந்து விலகி வாழலாம். அதனால் எவ்வித பாதிப்பும் பிறருக்கு ஏற்படாது...

அதையே சிவ—சக்தியர் செய்தால்...?

இந்த விசித்திர நிலைக்கு தேவ — தேவியாரும் ஆளானல்...

மதுரையில் பிட்டுக்கு மண் சுமந்த போது மகேசன் பட்ட அடி இந்த மண்ணுடை மாந்தர் அனைவர் முதுகிலும் விழுந்தது. அனைவரும் அந்த வேதனையை உணர்ந்தனர்.

பார்வதி தேவியைத் துறந்து ஈசன் தவக்கோலத்தில் இருந்ததால். உலக மாந்தர் யாவருமே மனைவியுடன் கூடி வாழும் இன்பவாழ்வில் நாட்டமில்லாதவர்களாக இல்லறம் துறந்து இயந்திரமாக இயங்க ஆரம்பித்து விட்டனர்.

சிருஷ்டித் தொழிலே ஸ்தம்பித்து விட்டது. உலகம் வெறுமையாகி விட்டது. இயக்கங்கள் மந்தித்துப் போய் விட்டன. ஜீவகோடிகளின் வாழ்வில் பசுமை அழிந்து போயிற்று... அதைக் கண்டு அனைவரும் கலங்கினர்.

மகாவிஷ்ணு, பிரம்மா போன்ற தேவதேவர்களும் திகைப்புற்று செயல் வகையறியாது சோர்ந்து நின்றனர்.

இந்த நிலையின் மாற்றத்துக்கு என்ன வழி...?

சிவ—சக்தியின் இணைப்பு நிகழந்தேற வேண்டும்.

அதை நிறைவேற்ற வல்லார் யார்?

அனைவரும் மன்மதனை நோக்கினர்.

''ரதிநாதா, நீ ஒருவனே. லோக சம்ரக்ஷணத்துக்குப் ப்ணிபுரிய வல்லாய்! உன் கரும்புவில் தான் பிறந்த பயனை அடையப்போகிறது...!''

—இம் மொழி கேட்டுப் பெருமிதத்துடன், ''தேவ தேவர்களே, யான் செய்ய வேண்டுவதென்ன?'' என்று கேட்டான் மன்மதன்.

''சிவ—சக்தியரை இணைக்க வேண்டும். அம்பிகை மலையரசன் மகளாய் அவதரித்து வாழ்கிருள். ஈசனே அன்னையை ஆட்கொள்ளாது பிரிந்து-அந்தப் பிரிவின்

வெப்பம் இந்தப் பிரபஞ்சத்தையே தாக்குமளவு-தனித்து தவநிலையில் இருக்கிறார். அவருக்கு உன் கரும்பு வில் பாணத்தால் இல்லற வேட்கையை உருவாக்கவேண்டும். தேவியின்பால் அவர் திருவுளம் திரும்பி நாட வழிசெய்தல் வேண்டும். இவ்வரிய பணியை இவ்வுலகில் உனையல்லால் வேறொருவர் நிறைவேற்ற முடியாது'' என்றனர்.

திகைத்துப் தடுமாறிப் போனான் மன்மதன்.

''தேவர் பெருமக்களே, இது என் அழிவுக்கு நான் தேடும் வித்தாகும். மூவுலக நாயகனுக்கு மலர்ப்பாணம் தொடுத்து மோகத்தை ஊட்டும் வல்லமை எனக்கேது...? எனவே அடியேனை அப் பணிக்கு ஆட்படுத்தாதீர்...!' என்று மறுத்தான் மன்மதன்.

''மன்மதா, நீ இப்போது எம் கட்டளையை மறுக்கவில்லை... மகேசனே உனக்கிட்ட உன் கடமையைத் துறக்கிறாய்...'' என்று சினந்தனர், விஷ்ணு பிரம்மா முதலான தேவாதி தேவர்கள்.

''மகேசன்மேல் மலரம்பு விடுவதா என் கடமை!''' என்று பதறினான் மன்மதன்.

''மகேசனேயானாலும் மலைக்காது பணியைச் செய்வது தான் உன் கடமை. இந்த உலக இயக்கத்துக்கு மும்மூர்த்திகளான நாங்கள் சிறப்பான பணியைச் செய்ய எங்களுக்கு கையுதவியாய் நிற்கும் பிரதான பொறுப்பை ஏற்றிருப்பவர்கள், இருவர். முதலாமவன் மன்மதனான நீ. இன்னொருவன் யமன். நீயின்றி பிறப்பில்லை. யமனின்றி இறப்பு இல்லை. முதலுக்கு நீ ஆதாரம்; முடிவுக்கு அவன் ஆதாரம்... உலகம் உய்ய நீங்கள் இருவரும் அப் பணியைச் சரிவர எவ்விதத் தாட்சண்யமும், இன்றி நிர்ப்பயமாகச் செய்தாக வேண்டும். மகேசலிங்கத்தைப் பற்றினபோதும் அஞ்சாது மார்க்கண்டனின் உயிர் பறிக்க பாசத்தை வீசித் தன் பணியில்! சிறந்து நின்றான் ;யமதர்மன்—இன்றோ, நீ

பணியில் தயங்கி-உன் அச்சத்தால் அவமானத்துக்கும் பழிக்கும் ஆளாவாய்! மகேசன் என்றும் சாமான்ய மாந்தர் என்றும் பாகுபாடு பார்க்கும் நீ, உன் கடமைக்குப் பொருந் தாதவனுகி விடுவாய்... என்ன செய்யப் போகிருய்... உலக உய்வுக்குப் பணியாற்றப் போகிருயா? அல்லது உன் அவமானகரமான உயிரோம்பலுக்கு இலக்காகி ஈனப்படப் போகிருயா?'' என்று கேட்டனர் தேவதேவர்கள்.

மன்மதன் மயங்கி நின்ருன்...

முடிவில் ஓர் உறுதியான எண்ணம் அவனை ஆட் கொண்டது.

'தென்றல்' என்னும் தம் தேரிலேறி இன்ப நாயகனுன மன்மதனும் — ரதியும் இறைவன் இருந்தமர்ந்து தவமியற்றும் ஆலமரத்தடிக்கு வந்து சேர்ந்தனர்.

''சர்வேஸ்வரா! இது நீ எனக்கு இட்ட கடமை. என் கையிலிருக்கும் மலரம்பு நீ எனக்குத் தந்த ஆயுதம். இதன் வெற்றி தோல்வி உனக்கே அர்ப்பணம். அந்த வெற்றிக்கும் தோல்விக்கும் நீயே பொறுப்பாளி!'' என்று துதித்து வணங்கித் தன் மலரம்பை ஈசன்மீது தொடுத்தான்.

தவாக்கினியில் ஜொலித்துக் கொண்டிருந்த தேவ தேவனின் திருமார்பில் மலரம்பு பனிமலர்க் கோளமாய் தாக்கியது. ஒருகணம் திடுக்கிட்டவராகக் கண் விழித்தார் கயிலைநாதன்.

மகேசனின் விழிநோக்குக்கு ஆற்ற முடியாமல் மலரம்பு வலிமை இழந்தது. உள்ளத்து வைராக்கிய உக்கிரம் பொங் கியதும் மகேசனின் மூன்ருவது நெற்றிக்கண் தானுகத் திறந்தது.

அடுத்தகணம், கயிலை எங்கும் அக்கினிப் பொறி பறந்தது..

அந்த அக்கினி ஜுவாலைக்கு இரையாகி மன்மதன் வெந்து நீருனன்...

''ஐயகோ, நம்மால் மதனனும் அழிந்தான்; இந்த மாதவம் செய் மாந்தரும், மாபெரும் அண்ட கோளங் களும் உய்வற்று ஒழிவதாயிற்றே...!'' என்று கலங்கி நின்றனர் தேவதேவர்கள்.

ஆனல் அந்த அழிவிலும் மனம் சோராது ஏறுகொண்ட பார்வையுடன் எழுந்து நின்றவள் ரதி ஒருத்திதான்.

வெந்து சாம்பலாகிக் கிடந்த தன் நாயகனை உறுத்து நோக்கினள். பின் எரிதழல் விழி வீச்சுடன் எழுந்து நின்ற ஈசனை மறுகணம் உற்று நோக்கினள்.

அவள் பார்வையில் கணத்துக்குக் கணம் உக்கிரம் அதிகமாகியது. மூலதேவரான மகேசுவரரின் முக்கண்ணின் உக்கிரத்தை விட ரதியின் கண்களின் உக்கிரமும் கோபா வேசமும் அதிகமாகிக் கொண்டிருந்தது. ரதியின் வெந்தழல் பார்வையில் வேதநாயகியான ஆதிபராசக்தியின் ஆவேச மாய் ஆர்த்தெழுந்து நிற்பது போலிருந்தது.

அந்தப் பார்வையின் அனல் ஜொலிப்பைக் கண்டு ஆல முண்ட கண்டனை சிவனே திகைத்து நின்ருர்.

ரதி சர்வேஸ்வரனை நோக்கி, ''ஆதிசிவனே, அக்கிரமம் செய்தீர்! ஆற்றல் அற்றவருக்கு அநீதியாகத் தண்டிக்கும் உரிமை எது!'' என்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

''மன்மதன் தேவியே, மமதையால் அறிவை இழந் தனையா? என்ன கூறுகிருய்? யாம் ஆற்றலற்றவனு? எம்மால் உன் கணவன் அநியாயத் தண்டனை பெற்ருனு? எப்படிக் கூறத் துணிந்தாய்?'' என்று சீறினுர் சிவபெருமான்.

''நீர் இட்ட பணியை நிறைவேற்ற வந்த என் நாயகன் தன் பணியை உமக்கே அர்ப்பணம் செய்தபின்னரே தொடங்கினுர். ஆனல், அதில் அவர் தோற்ருர் என்ருல் அவருக்கு நீர் கொடுத்த பலம் தோற்றுவிட்டது என்று அர்த்தம்... அதாவது நீரே தோற்றுவிட்டீர் என்று

அர்த்தம்...! அந்தத் தோல்விக்குக் காரணம். உம் உள்ளத்தில் இருந்த வெப்பம் அந்த வெப்பத்துக்குக் காரணம் உமாதேவி உம் அருகே இல்லாத வெறுமை... ஆம் சக்திதேவி உம்மிடம் இல்லாமையால், நீர் நியமித்த பணியை உம் மூலம்கூட நிறைவேற்றிக் கொள்ள ஆற்ற லற்றவராய் — சக்தி இல்லாதவராய் — என் கணவரை அக்கினிக்கு ஆட்படுத்தினீர்... நீர் இவ்வாறு சக்திதேவி இல்லாமையால் பலவீனப்பட்டு அசக்தராய் ஆற்றலற்றுப் போனதற்கு என் கணவர் தண்டனை அனுபவிப்பதா...'' என்று ஆவேசப் புயலாய் சீற்றத்துடன் கேட்டாள் ரதி.

மறுமொழி கூருது மவுனம் காத்து நின்ருர் மகேசன். அந்த ஈசனின் மவுனத்தில் மன்மதனின் வெற்றி மின்னியது...

பிறகென்ன?

நெறிவயப்பட்ட தாம்பத்திய வாழ்வே மானுடர் தர்மம் என்பதை நிலைநாட்டவே-தேவியின் வாயிலாக அந்த அம்சத்தைப் போதிக்கவே. அன்று அந்த மன்மத எரிப்பு நாடகத்தை இறைவன் திருவுளம் கொண்டு நடத்தினுர்.

அதைத் தொடர்ந்து உலகுக்கு இன்னெரு உண்மையை யும் உணர்த்தவே அடுத்த நாடகத்தையும் தொடங்கி, அதை அந்தத் தாமிரவருணி தீரத்தில்-நெல்லைத் திருத் தலத்தில் நிறைவுபெறச் செய்யத் திட்டமிட்டனர் தேவ தேவியர்.

அதுதான் இறைவனின் 'திருக்கல்யாண' நாடகம்!

இறைவனின் 'திருக்கல்யாணம்' ஒரு நாடகமா...?

ஆம்; காலங்களை வென்று யுக யுகாந்திரங்களுக்கும் அப்பால், அனுதிபாய், ஆதிபெரும் சக்தித் திருவாய், அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகர்களாய் சங்கமித்து சக்திப் பிழம்பாய் எங்கும் நிறைந்து-பின் மூவுலகையும்

அதன் இயக்கங்களையும் உருவாக்கிய தேவ தேவியருக்கும். தம்மால் படைக்கப் பெற்றவர்கள் முன் 'திருமணம்' என்ருல், அது ஒரு நாடகம் அல்லாது வேறென்ன...!

அந்த நாடகம்—

மன்மதனை எரித்து-தாம்பத்திய வாழ்க்கை நியதியை ரதி உருவில் தேவி மூலம் உணர்த்தியபின்—

மன்மதனுக்கு உயிர்மீட்சி அளித்தபின்—

கயிலையில் நிகழ்கிறது—

மூப்பத்து. முக்கோடி தேவர்களுக்கும் மூவுலக ஜீவ கோடிகளுக்கும் காணக் கிடைக்காத காட்சி ஒன்று கண்ணுக்குக் கவின் விருந்தாகப் போகிறது...

அதைக் காண சர்வலோக ஜீவாத்மாக்களும் சாரிசாரியாக கயிலையில் கூடுகின்றனர்.

மூவுலகமும் பூகண்டத்திலுள்ள ஒரு மூலையில் கூடியதால் பாரம் தாங்காது கயிலை சரிகிறது: ஆட்டம் காண்கிறது.

அம்மலை நிலைபெற்றிருக்கும் பாரதத்தின் வடபகுதி சாய்ந்து சரிய, தென்பகுதியை சரிப்படுத்தும் அவசியம் உருவாகிறது.

அப்படிச் சமனப்படுத்தாவிட்டால், காணுதற்குரிய அக்காட்சியினை கயிலையில் கூடியிருக்கும் ஜீவகோடிகள் காண முடியாது.

'வடபகுதியில் குவிந்திருக்கும் பாரத்தைத் தென் பகுதிக்குச் சென்று சமனப்படுத்தும் வல்லமை யாருக்கு உண்டு?' என்று கேள்வி பிறக்கிறது.

'அகிலாண்ட கோடி ஜீவராசிகளின் பாரத்துக்கு ஈடு கட்ட வல்லவர் அகத்தியர் ஒருவரே' என்றுணர்ந்ததும், அனைத்து தேவர்களும் அவரிடம் வந்து இறைஞ்சுகின்றனர்.

''அருந்தவ முனிவ, நீவிர் அருள் புரிந்து தென்திசை சென்று இந்தச் சரிவைச் சமனப்படுத்துக!'' என்று வேண்டு கின்றனர்.

''அம்மையப்பர் திருக்கல்யாண விழா காண நான் மட்டும் அருகதையற்றவனு...? அனைத்துயிர்களும் பெற்ற பேறு அடியேன் நான் பெருது ஒழிய அத்துணைப் பாவம் என் செய்தேன்!'' என்று பதறினுர் அகத்தியர்.

''அகத்தியா, நீ செய்த புண்ணியத்தாலேயே இப்பேறு உன்னை நாடி வருகிறது!'' என்ருர் சர்வேசுவரன்.

''தயாநிதியே, நீவிரும் இதற்கு உடந்தையா...? நும் கல்யாணத் திருக்காட்சியை எனக்கு மட்டும் காட்டியருளா திருக்கத் திருவுளம் கொண்டீரோ, தேவ தேவா!'' என்று புலம்பினுர்.

''அகத்தியா! நின் சைவப் பெருமையையும், நீ காக்கும் தமிழின் பெருமையையும் உலகுக்கு உணர்த்தவே இத்தரு ணத்தை நாம் பயன்படுத்துகின்ருேம்... இந்தக் கயிலையில் ஏற்பட்ட பூபாரத்தைச் சமனப்படுத்த நீ ஒருவன் தென் பகுதிக்குச் சென்ருல் போதும் என்ருல் என்ன பொருள்...? இங்கு கூடியிருக்கும் தேவாதி தேவர்கள், அண்ட கோடி களிலுமுள்ள அனைத்து ஜீவாத்மாக்கள் அனைவரின் சக்தி களுக்கும் இணையானவன் நீ என்பது மட்டுமல்ல; இந்த ஜீவாத்மாக்களுடன் இங்கு தங்கி திருக்கல்யாணக் காட்சி தரும் எங்களையும் சேர்த்து இங்கு இருப்பவர்களுக்கும் நீ இணையானவன் என்றுதான் பொருள். ஆம்; உன் அம்மை யப்பர்களான யாமும் தேவியரும்கூட உனக்கு இணையல்ல... எம்மிலும் சக்தியால் உயர்ந்தவன் நீ! இதை உலகறிய உணர்த்தவே இத்திருக்காட்சி சம்பவிக்கிறது. எனவே எம் திருவுளத்துக்கு உடன்படுவாய்!'' என்று கட்டளையிட்டார், தேவதேவன்.

அவ்வுரை கேட்டு அகத்தியர் புன்னகைத்தார்.

''அகத்தியா, உன் புன்னகைக்குப் பொருளென்ன?' என்றார் ஈசன்.

''தேவா, நீவிரும் இங்கு இருப்பதால் உமது பாரத்தையும் சேர்த்து சமனப்படுத்தும் சக்தி எனக்கு இருப்பதாகக் கூறுவது எப்படிப் பொருத்தமாகும்! நான் தெற்கே சென்றால், நான் மட்டுமா செல்வேன்...? என் மனத்துள் நிறைந்திருக்கும் தேவ தேவியரான தாங்கள் இருவரும் சேர்ந்தல்லவோ என்னோடு உடனிருப்பீர்... நீவிர் இல்லாமல் சைவம் ஏது? தவம் ஏது? ஞானம் ஏது? தமிழ்மொழி ஏது? அவற்றைப் பற்றி நிற்கும் நானும் ஏது?'' என்றார் அகத்தியர்.

சர்வலோக நாயகன் அருள்மயமாய்ப் புன்னகைத்தார். ''அகத்தியா, உன் தமிழ் ஞானம் வென்றது. உன் அறிருத்திண்மையைக் கண்டு பூரிக்கின்றோம். ஆயினும், எம்மிலும் உனது சக்தி உயரியதே என்று நாம் வேறு ஒரு செயலால் உணர்த்த விரும்புகிறோம். அது உலகுக்குத் தேவையானதோர் நீதி.லோக நன்மை கருதியாவது எம் கட்டளையை ஏற்பாய்!'' என்றார் ஈசன்.

''அடிபணிகிறேன் தேவதேவா... ஆனாலும் அடியேனுடைய கோரிக்கை ஒன்றையும் நீவிர் நிறைவேற்ற வேண்டும்'' என்றார் அகத்தியர்.

''எம் திருக்கல்யாணக் காட்சியை நீ தெற்கிலிருந்தே காண வேண்டும்...அவ்வளவுதானே?'' என்றார் இதழ்களில் குறுநகை மிளிர விடையொருபாகர்.

''அதுமட்டுமல்ல தேவா, இன்னுமொன்றும் உண்டு...!'' என்றார் அகத்தியர் புதிர் பொதிந்த புன்னகைப் பெருக்குடன்.

''வேறென்ன வேண்டும்?''—கனிவார்ந்த புன்னகை எழில் ஜோதியாய் இறைவனாரின் செவ்விதழ்களில் மலரக் கேட்டார்.

''தேவா, இங்கு நடக்கும் தங்கள் திருமணத்தை நான் எங்கேயோ நின்றுதானே காண்கிறேன்! அதற்குப் பதிலாக...'' தயங்கினுர் அகத்தியர்.

''தயங்காது கூறுக! அதற்குப் பதிலாக நாம் என்ன செய்யவேண்டும்...?'' என்று வினவினுர் வேதநாயகன்.

''தென்புலத்தில் நான் இருக்குமிடத்துக்கு நீர் வந்து— எனக்காக என்முன் ஒரு திருக்கல்யாணம் செய்துகொள்ள வேண்டும். அந்தத் திருமண வைபவத்தை நானும் என் துணைவியும் முன்நின்று நடத்தவேண்டும். அதாவது மண மகனுக நீரும்-மணப்பெண்ணுக தேவியும் அமர்ந்திருக்க, உங்களுக்குத் திருமணம் நடத்தும் தந்தை-தாய் அந்தஸ்தில் நாங்கள் இருக்கவேண்டும். அப்படி நீர் வாக்கு தருவீர் என்ருல், இத்திருக்கல்யாண வைபவத்தை நேராக நின்று காணும் பாக்கியத்தையும் உம் கட்டளைக்காகத் துறந்து தென்புலத்துக்குச் செல்கிறேன்'' என்ருர் அகத்தியர்.

அவரை ஆரத்தழுவிய பரம்பொருள்,

''அகத்தியா, எமக்கு லோகத்தில் ஒரு பழி உண்டு தெரியுமா? ஆம்! அனுதை என்ற பழி. தந்தை தாயற்று, எம்மிலிருந்தே நாமாய் நாம் உருவாகியதால் தந்தை தாயற்றவர் என்ற அபவாதம் நமக்கு உண்டு. அதை இப்போது நீக்கிய பெருமை பெறுகிருய் நீ! உன் கோரிக்கையால் பெருமை பெறுவது நீயும் உன் துணைவியும் அல்ல; யாமும் லோகநாயகியும் தாம்! உன் விருப்பப் படியே நாம் உனக்காக ஓர் உன்னத திருத்தலத்தில் மீண்டும் திருமணம் செய்துகொள்கிருேம்'' என்ருர்.

''இறைவா, பிறவிப் பெரும்பயன் பெற்றேன்... அந்தப் பாக்கியத்தை நான் பெற எங்கு காத்திருக்க வேண்டும்? தாம் திருவுளத்தில் நிச்சயித்திருக்கும் அத்திருத் தலம் எது?'' என்று களிபேருவகையுடன் பணிந்து நின்ருர் குறுமுனி.

''தென்திசையில் ஞானமும் வேதமும் பொலிவு பெற்றிருக்கும் புனித பூமி அது...அங்கே. எம்மைக் குழந்தையாய்க் கையில் ஏந்தி வளர்க்க வேதங்களே மூங்கில்களாக வளர்ந்து நிற்கும் பெருமை பெற்றிருக்கின்றன... வேதங்களின் ஞான ஒளியில் சோபை பெற்றிருக்கும் அத்தலத்தைப் புனிதப் படுத்த அம்பிகையே அவதரித்து உலகியல் அறங்கள் முப்பத்திரண்டையும் நடத்திக் காட்டப் போகிறாள்... அத்தலத்தில் இன்னும் ஒரு பெருமையோடும் திகழப் போகிறாள்...'' என்று புன்னகைத்தார் தேவதேவன்.

''அப்பெருமை என்ன தேவா?'' என்று புளகித்து தொழுது கேட்டார் அகத்தியர்.

சுடர் மின்னலாய் புன்னகை ஒளி வீச ''அகத்தியா, எம் திருமணக் கேந்திரங்களாய் பெருமை பெற்ற சில அபூர்வ தலங்கள் உண்டு. காஞ்சி, மதுரை போன்றவை அவற்றில் சிறப்பு மிக்கவை. அவையனைத்திலும் காணாத ஒரு எழில் நான் கூறும் திருத்தலத்துக்கு அமையப் போகிறது. அம்பிகை காஞ்சியில்தவசீலியாய்த்திகழ்கிறாள்...மதுரையில் அரசியாய்த் திகழ்கிறாள். ஆனால், உனக்காக நான் திருக் கல்யாணம் நடத்தவிருக்கும் அத்தலத்தில் அவள் கருணை சேர் **அழகியாய்** திகழ்வாள்! அவளுடைய நாமத்திலேயே அழகு ஒளி பெற்றிருக்கும்.

''ஆம்...; வடிவுடை மங்கையாய், அழகில் **காந்திமதி**யாய் ஒளி மின்ன அங்கே நின்றருள் புரிவாள் லோகநாயகி! அங்கே அவளுடைய பேரெழில் பூத்த பெருமையால்-அத்தலத்தில் பாயும் பொருநை நதியும், அந்த நதி பாயும்நாடும் சுந்தரப் பெருமைகளுடன் சுகஜீவ சௌந்தர்யங்களும் பெறும்! அதுதான் தாமிரவருணி பாயும் நெல்வேலித் திருநகரம்...

''காஞ்சியைப்போல் அங்கேயும் ஒரு கம்பா நதிக்கரையில் லோகநாயகி தவமியற்றுவதால், அத்தலம் 'தென் காஞ்சி'யாகப் பெயர் பெறும், இந்தக் கயிலையில் நாம்

நடத்தும் திருமணம்போல் அங்கும் அற்புதப் பெருமையோடு உனக்ககாத் திருக்கல்யாணம் செய்ய விருப்பதால், அந்தத் தலத்துக்கு 'தென் கயிலே' என்று பெயர் அமையும்...'' என்ருர், தேவதேவன் மலர்ந்த புன்னகையுடன்.

## 11

அன்னேயின் அவதாரத் திருத்தலங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு தெய்வீக நோக்கம் இருக்கும். அது உலக சம்ரட்சணத்தின் உயிர்நாடித் தத்துவமாகவும் அமைந்திருக்கும்.

ஆனுல், நெல்லேயில் அன்னே காந்திமதியாக எம் அம்மை ஆதிபராசக்தி அவதரித்த நோக்கமோ உலக மாந்தரின் உய்வு மட்டுமல்ல; உலகநாயகனின் திருவாக்குப் பரிபாலனமும்கூட.

அன்று தமிழ் முனிவன் அகத்தியனுக்கு உமா—மகேஸ்வரர்கள்அளித்தவாக்குறுதிப்படி, அவன்முன்நெல்லேத் திருத்தலத்தில் ஒரு திருக்கல்யாணம் நடத்த நிச்சயிக்கப் பட்டிருந்தது. அதை நிறைவேற்றி, இறையருளின் திருவாக்கை பரிபாலனம் செய்ய அவதரித்தாள் அன்னே.

அங்கு அறநெஞ்சத்து மானிடருக்காய் அன்னே முன்வந்து இரண்டு உலகியல் நல்வாழ்வு அறங்களேச் செய்து காட்டி அருளியதோடு, முற்பிறவித் தீவினேயால் இப்பிறவியில் அல்லலுறும் ஏழையரின் இன்னல் நீக்கவும், அறமெனும் செங்கோல் ஏந்தி அருள்நாயகியாய் விற்றிருக்கிருள் அத்தலத்தில்.

அதோ...ஆடிப்பூரத் திருநாள்! அன்னேயின் திருத்தலத்தில் நடக்கும் அத்திருநாள் அவளுடைய பெண்மக்கள் தம் பிறவிப் பெரும்பயன் பெறுவதற்கு அருள் வழங்கும் திருநாளாய் மலர்கிறது.

பெண்மையின் தவப்பயன் தாய்மை. அந்தத் தாய்மைப் பேறில்லாத பெண்கள் அன்னை காந்திமதியின் அருளால் வரப்பெருமை பெற்று உய்வு பெறும் திருநாள்தான் அந்தத் திருநெல்வேலி திருத்தலத்தில் நிகழும் ஆடிப்பூரத் திருநாளின் தனிச்சிறப்புப் பெற்ற வைபவம்.

வளைகாப்பு விழா என்றும் முளைக்காட்டுத் திருநாள் என்றும் அழைக்கப்பெறும் அத்திருநாளில் அன்னை காந்திமதியை அலங்கரித்து மண்டபத்தில்அருளிருக்கை கொள்ளச் செய்திருப்பர். அவள் மடியைச்சுற்றி வளையல்கள்...

கர்ப்பவதியாக இருப்பவர்கள் கொழுக்கட்டை போன்ற நைவேத்தியப் பொருட்களை மடியில் கட்டி அம்மையை வணங்கி அருள் பெறுவர். சுகமான மகப்பேறு பெற்று, தாழ்விலாப் பெருமை பெற—அன்னையின் அருள்சித்திக்க அங்கே வேண்டி நிற்கின்றனர், அவர்கள்.

அதேசமயம் மகப்பேறு வாய்ப்புப் பெறாத மகளிர், அன்னையின் மடியிலிருக்கும் வளையலைப் பிரசாதமாகப் பெற்று, தம் வாழ்வின் தவப்பேற்றை பெறுகின்றனர்.

அன்னையின் ஆலயத்தில் நிகழும் திருவிழாக்கள் ஒவ்வொன்றிலும் அன்னையின் கருணையைக் காண்கிறோம்.

சித்திரை மாதத்தில் நிகழும் கோடைக் கட்டளை என்னும் வசந்தருது. வையமெல்லாம் வசந்தம் பெற அன்னையும் இறைவனும் வசந்த மண்டபத்தில் குளிர்ச்சியான இருக்கை கொண்டு, குளுமை மிக்க அருள்தரும் திருவிழா. வசந்த மண்டபத்தில் சுற்றிலும் தண்ணீர்விட்டு வெட்டிவேர் தட்டி கட்டியிருக்க நடுவில் தேவி ஈசனுடன் அமர்ந்து அருள் தருகிறாள். இறைவனையும், தேவியையும் சுற்றி குளுமை என்றால் இவ்வையகமே குளுமை மிக்க அருள் பெறுகிறது என்று பொருளன்றோ!

வைகாசி மாதம் விசாகத் திருநாள் விழா தெய்வமணம் சேர்க்கிறது.

ஆனியில் அவனியெங்கும் புகழ் மணக்கும் மகோற்சவம் இத்திருவிழாவின் நிறைவுச் சிறப்பாகத் தேரோட்டம்... 'நெல்லையில் தேரோட்டம் என்றால், நெஞ்சமெங்கும் அருளாட்டம்' என்னும் வண்ணம் அம்மையப்பர்கள் வீதி உலா வரும் அந்தத் திருக்காட்சி வையமும், வானும் போற்றியேற்றும் வைபோகம்!

ஆடியில் அரிவையர் உய்வுபெறும் பூரத்திருநாள்.

ஆவணியில் மூலத்திருநாள், புரட்டாசியில் தேவிக்கே உரிய நவராத்திரி விழா. ஐப்பசியில் அகத்தியருக்காக தேவ தேவியர்கள் அத்தலத்தில் நடத்திக் காட்டிய திருக் கல்யாண உற்சவம். கார்த்திகையில் கார்த்திகை தீபவிழா வும், சோமவாரத்திருவிழாவும், மார்கழியில் திருவாதிரைத் திருவிழா; தை மாதத்தில் பூசத்திருவிழா. மாசியில் சிவராத்திரி. பங்குனியில் உத்திரத் திருநாள்...

—இப்படி, திங்கள் தோறும் திருநாட்கள்...திங்கள் முடியானும் தேவதேவியும் அருளாட்சி செய்யும் அத்தலத் தில் அம்மையப்பரின் அருள் பற்றி நிற்கும் நெஞ்சமெங்கும் கருணை வாழ்வு...

இத்தலத்தில் இத்தகைய அருள் ஞானப் பெருமை களுடன் தேவதேவியர் கருணைப் பேராட்சி செய்து கொண் டிருப்பதன் பெருமை அனைத்துக்கும் மூலசக்தி எது...?

ஓர் உண்மையால் அது உணர்த்தப் படுகிறது...

இவ்வுலகம் யாவும் இறைவனின் அசைவில் உன்னத மானது, அவன் திருப்பாதம் பெயர்த்து ஆடிய திருநடனம்.

அந்த இறைவனின் அசைவில் உன்னதமானது, அவன் திருப்பாதம் பெயர்த்து ஆடிய திருநடனம்.

தில்லையில் பொற்சபை கண்டு ஆடினார் அருள்நாயகர். மதுரையில் வெள்ளியம்பலம் கண்டு ஆடினார். திருக் குற்றாலத்தில் சித்திரசபையும், திருவாலங்காட்டில் ரத்ன

சபையும், திருநெல்வேலித் திருத்தலத்தில் தாமிரசபையும், கண்டும் கொண்டும் ஆடினர்.

இவ்வாறு திருச்சபைகளில் இறைவன் ஆடும் அந்தத் திருநடனம் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விதமான சக்திப் பிரபாவங்கள் உற்பத்தியாகியிருக்கின்றன.

போட்டிக்காகத் தில்லையில் ஆடினர். 'கால்மாறியாட வேண்டும் தேவா' என்று வேண்டிய பாண்டியனுக்காக மதுரை வெள்ளியம்பலத்தில் ஆடினர் வேதநாயகன்.

ஆனல். திருநெல்வேலி தாமிரசபையிலோ, இறைவன் ஆடியது அன்னை காந்திமதியின் மகிழ்ச்சிக்கும், ரசனைமிக்க புன்னகை ஒன்றிற்கும்தான் என்கிறது இறை வரலாறு.

என்னே, இத்தலத்தின் பெருமை!

என்னே இங்கு உறையும் அன்னை காந்திமதியின் அருமை...!

முன்னம் இறைவன் ஆடிய உக்கிரமான ஊர்த்தவ தாண்டவத்துக்கு மாறுதலாக ஆனந்த சௌந்தரிய நடனம் ஒன்றை திருநெல்வேலி திருச்சபையில் ஆடிக் காணவேண்டும் என்று இறைவனை இயக்கினள், லோகாம்பிகை.

அதன் பயனே தாமிரசபை அமைத்து இத்தலத்தில் இறைவன் ஆடிய திருநடனம்.

அதோ...வேதகாலத்தில் நடந்த அந்தத் திருநடனக் காட்சியை நம் உள்ளம் கண்டு சிலிர்க்கிறது.

தாமிரசபை தேவ தேவர்களால் தெய்விக மணம் கமழ்ந்து நிறைந்திருக்கிறது. பிரம்மாதி தேவர்கள் இசை வாத்தியங்களை முழக்குகின்றனர். தேவ துந்துபி முழங்குகின்றது. பிரம்மாவும் விஷ்ணுவும் பேரானந்தப் பெருக்கில் பக்கம் பக்கம் அமர்ந்திருக்கின்றனர்.

அனைவருக்கும் நடு நாயகமாக அன்னை காந்திமதி சபைக்கு நாயகியாக அமர்ந்திருக்கிருள்...அவள் முன்

அவளுக்காக இறைவன்...ஆடும்போது, எம் அன்னை தானே சபாநாயகி!

அரன் ஆடத் தொடங்குகிறார். அவர் திருப்பாதம் பெயர்த்தாடத் தொடங்கியதுமே ஆனந்தமும் சௌந்தர்யமும் அங்கே பொங்கிச் சொரிகின்றன.

திருமுடி மீது சடை விரிந்தாட; சூடகக் காதில் குழையசைந்தாட; கையில் மழுவாட, அரையில் புலித் தோலாடை ஆட ஆனந்த மயமாய் இறைவன் ஆட ஆட... அகிலாண்டகோடிகள் ஆர்ப்பரித்துக் கூத்தாட, வேத ஞானங்கள் விகசித்து ஒளி பரப்பியாட, பிரணவம் பேரொளி சிந்தியாட, பெருமையுறு தவங்களும் - தவம் தரும் சீலங்களும் தண்மைத்தகைமை பெற்றாட...ஆஹா... எங்கும் ஆனந்தம். சௌந்தர்யம்! அந்தக் கோலாகலம் கண்டு அன்னையின் திருமுகம் மலர்கிறது. அவள் செவ்விதழ் ஓரங்களில் கோடிசூரியப் பிரகாசமாய் புன்னகை பூரித்துப் பொங்குகிறது.

அவள் முக மலர்ச்சியில் தன் ஆடல் பயனைக் கண்ட அரனார். ''அம்பிகையே, உன்திருவுளம் நிறைவுபெற நான் ஆடிய பெருமையால் - அதன் பயனால் சீர்மையும், வளமும் பெறுகிறது இந்தத் திருத்தலம். இன்னும் யாது வேண்டும்?'' என்று கேட்கிறார்.

அன்னை அபூர்வமாக ஒரு கோரிக்கை விடுக்கிறாள்... ''தேவ தேவா...இன்று நான் கண்ட திருநடனத்தை நான் என்றும் இத்தலத்தில் காணவேண்டும்...ஆம் தினமும் இத்திருத்தலத்தில் உம் நடனம் நடைபெறண் வேடும்!'' என்றாள்.

''அப்படியே ஆகுக...!'' என்றார் இறைவன்.

அதன் பலன், இறைவனும், தேவியும் இத்தலத்தையே கைலாயமாக்கி அங்கே உறைந்தனர்.

அங்கேயே தங்கி, தாமிருந்து சபை கண்டதால் 'தாமிர சபை' என அத்தலத்துக்குப் பெருமை சேர்த்தனரோ தேவ தேவியர்...? யாரறிவார்...!

அதோ அத்தலத்தில் அருள்வேண்டி கரம் கூப்பி நிற்கிறோம்.

இவ்வையகத்துக்கு கருணையும், உய்வும் அளிக்க, பிறப் பறுக்கும், பெம்மான் திருப்பாதம் பெயர்ந்து திருநடனம் ஆடும் காட்சி நம் கண்களுக்கு மனவெளி காட்டுகிறது.

'எங்கும் அருள் மணம்...என்றும் நீங்காத தேவதுந்துபியின் 'நாதம்...கவின் பெருமைச் சொட்டும் கலைமகளின் ஞானகீதம்...'

'தாம் தை...தாம்...' ஜதிகள் தெய்வீகமாய் முழங்குகின்றன...

தர்மமாய் தேவதேவன் எங்கும் ஆனந்தசௌந்தர்ய அலை பெருக்கி நிறைய ஆடுகின்றார். அதுகண்டு அன்னை சிரிக்கிறாள்.

எல்லைக்காணாத அருள் எங்கும் சொரிய, இத்தரையில் உற்றதுயர் இல்லையென மாய்ந்தோட, சுற்றி நின்ற பெரும் பிணிகள் அற்றறுந்து பறந்தோட, கழல் பற்றும் ஏழையர் தம் கலக்கமெல்லாம் களைந்தோட, வேதங்கள் பூ மணக்க, வித்தையெல்லாம் ஒளிசிறக்க, கருணைகள் ஆடிவர, கனிவுகள் தேன் சொரிய—

தன் அமுதக் கனிவாய் முகிழ்ந்து எம் அம்பிகை சிரிக்கின்றாள்...சிரிக்கின்றாள் ஜகமெல்லாம் தழைத்து வர!

---

## கல்வி, செல்வம், புகழ், சௌக்கியத்தைத் தரும் ஸ்ரீ லலிதா பஞ்ச ரத்னம்

### காலையில் மட்டுமே படிக்க வேண்டும்

1. ப்ராத: ஸ்மராமி லலிதா வதனு ரவிந்தம்
பிம்பாதரம் ப்ருதுல மௌக்திக ஸோபிநாஸம் |
ஆகர்ண தீர்க்க நயனம் மணிகுண்ட லாட்யம்
மந்தஸ்மிதம் ம்ருகமதோஜ்வல பால தேஸம் ||

[அதிகாலையில் வணங்கும் என் அம்பிகையின் முகம் தாமரையைப் போன்றது. இதழ்கள் கோவைப் பழம்போல் சிவப்பு. அழகிய மூக்கு மூத்து மூக்குத்தியால் ஒளி வீசுகின்றது. விழிகள் ரத்னகுண்டலமணிந்த செவிகளைத் தொடுவதுபோல் நீண்டிருக்கின்றன. புன்சிரிப்பினுல் பிரகாசிக்கும் பற்கள்; அழகிய நெற்றியில் கஸ்தூரி திலகம். அந்த தேவி எனக்கு குறைவற்ற சுகத்தை அருளட்டும்.]

2. ப்ராதர் பஜாமி லலிதா புஜகல்ப வல்லீம்
ரத்னுங்குளீய லஸதங்குளி பல்ல வாட்யாம் |
மாணிக்ய ஹேம வலயாங்கத சோபமானும்
புண்ட்ரேக்ஷு சாபகுஸுமேஷு ஸ்ருணீர்
ததானும் ||

[ரத்ன மோதிரத்தால் பிரகாசிக்கின்ற தளிர் போன்ற விரல்களை உடையவளே! மாணிக்கக் கல் பதித்த பொன் வளையல்கள், நாகவங்கி, கரும்பு வில், புஷ்பபாணம், அங்குசம் இவைகள் அலங்கரிக்கும் புஜங்களை உடைய கற்பக வல்லியை அதிகாலையில் வணங்குகின்றேன். அந்த தேவி குறைவற்ற கீர்த்தியை அருள் செய்யட்டும்.

* * *

3. ப்ராதர் நமாமி லலிதா சரணு ரவிந்தம்
பக்தேஷ்ட தான நிரதம் பவஸிந்து போதம் |
பத்மா ஸனுதி ஸுரநாயக பூஜனீயம்
பத்மாங்குஸத்வஜ ஸுதர்சன லாஞ்சனுட்யம் ||

[பக்தர்களுடைய பிரார்த்தனைகளை உடனே நிறைவேற்றும் பவானி! சம்சாரக் கடலில் மூழ்கித் தவிப்பவர்களுக்கு ஓடம்போல் உதவுபவளே! பிரும்மா, இந்திரன் போன்ற தேவர்களால் பூஜிக்கப் படுபவளே! தாமரை, அங்குசம்,

த்வஜம், சக்கரம் என்ற ரேகைகளால் அலங்கரிக்கப்பட்ட பாதங்களை உடைய பார்வதியை விடியற்காலையில் நமஸ்கரிக்கின்றேன்.]

* * *

4. ப்ராத: ஸ்துவே பரசிவாம் லலிதாம் பவானீம்
த்ரய்யந்த வேத்ய விபவாம் கருணன வத்யாம் |
விஸ்வஸ்ய ஸ்ருஷ்டி விலயஸ்திதி ஹேது பூதாம்
விஸ்வேஸ்வரீம் நிகம வாங் மனஸாதி தூராம் ||

[உபநிடதங்களால் அறியக்கூடிய மகிமை வாய்ந்த உமா மஹேஸ்வரி! கருணை நிறைந்த காந்திமதி! பூவுலகைப் படைத்து, காப்பவளே! உலக நாயகி! வேதங்களுக்கும், வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாத வேதவல்லி! அதிகாலையில் உன்னை பஜிக்கும் எனக்கு அளவற்ற ஐசுவரியத்தைத் தரவேண்டும்.]

* * *

5. ப்ராதர் வதாமி லலிதே தவ புண்ய நாம
காமேஸ்வரீதி கமலேதி மஹேஸ்வரீதி |
ஸ்ரீ சாம்பவீதி ஜகதாம் ஜனனீ பரேதி
வாக்தேவதேதி வசஸா த்ரி புரேஸ்வரீதி ||

[லலிதாம்பிகே, காமேஸ்வரி, காந்திமதி, சாம்பவீ, சங்கரி, தயாபரி, சரஸ்வதி, மகாலட்சுமி, திரிபுரசுந்தரி, மீனாட்சி, விசாலாட்சி என்றெல்லாம் உனது புண்ணிய நாமாக்களை விடியற்காலையில் ஜெபிக்கும் எனக்கு அளவற்ற படிப்பைத் தரவேண்டும்.]

* * *

6. ய: ஸ்லோக பஞ்சகமிதம் லலிதாம்பிகாயா:
ஸௌபாக்யதம் ஸுலலிதம் படதிப்ரபாதே |
தஸ்மை ததாதி லலிதா ஜடிதி பிரசன்னா
வித்யாம் ஸ்ரியம் விபுல ஸௌக்ய மனந்தகீர்த்திம் ||

[சகல பாக்கியத்தையும் தரக்கூடிய இந்த ஐந்து ஸ்தோத்திரங்களையும் எவர் விடியற்காலையில் பக்தியுடன் படிக்கின்றனரோ அவருக்கு அம்பிகை கல்வி, தனம், குறைவற்ற சௌக்கியம், அளவற்ற கீர்த்தி இவைகளை உகந்து வாரி வழங்குவாள் என்பது நிச்சயம்.]

* * *

ஸ்ரீ லலிதா பஞ்ச ரத்னம் முற்றிற்று

## அனைத்தையும் தரும்
## 'அம்பிகை போற்றி'

1. அன்னையே அகிலாண் டேஸ்வரியே போற்றி
2. அன்னத்தைப் பழிக்கும் நடையுடைய ஹம்ஸத்வனியே போற்றி
3. அறிவிலா மூடன் எனக் கனுக்கி ரகிப்பாய் ,,
4. அறுபத்து நான்கு கலைகளுக்கும் அதிபதியே ,,
5. அபயமளிக்கும் அபயாம்பிகையே ,,
6. அழகுக் கடலான அங்கயற்கண்ணி ,,
7. அழகிய ஸ்தன பாரங்களையுடைய அம்பிகே ,,
8. அக்கினியாய் அருள் செய்யும் ஆவுடையே ,,
9. ஆதி சக்தியானவளே ஆதரிப்பாய் ,,
10. ஆதியந்த மற்ற பரம்பொருளே ,,
11. ஆழமான பார்வையையுடைய அபிராமி ,,
12. இன்பங்களெல்லாம் தந்தருள்வாய் ஈஸ்வரியே,,
13. இருளைப் போக்கி ஒளியைத் தரும் ஜோதியே ,,
14. இரத்த பீஜனை சம்கரித்த பத்ரகாளி ,,
15. இரவை ஏற்படுத்தும் சௌகந்திகா ,,
16. ஈசனின் இடப்பாகம் அமர்ந்தவளே ,,
17. உம்பர்களுக்கு உவப்பளித்த உலகமாதா ,,
18. ஊசிமேல் தவமிருந்த உலகநாயகியே ,,
19. ஊனிலும், உயிரிலும் கலந்த உமையே ,,
20. எங்கும் நிறைந்தவளே ஏகாட்சரி ,,
21. என் இதயமே கோவிலாய் கொள்ளுவாய் ,,
22. எல்லையற்ற குணநிதியே! ஏகாம்பரி ,,
23. என்றும் பதினாறாய் விளங்கும் ஏலங்குழலி ,,
24. ஏது செய்வேன், ஆதரிக்கும் நாயகியே ,,
25. ஏழேழு பிறவியிலும் எனைக் காப்பாய் ,,
26. ஐங்கரனைப் பெற்ற அன்ன பூரணியே ,,
27. ஐசுவரியத்தை அள்ளித்தரும் சோமசுந்தரியே ,,
28. ஒன்றே பலவான ஓங்காரி ,,
29. ஓம் என்னும் எழுத்திலே உறைந்தவளே ,,
30. ஔடதமாய் அருகிருந்து ஆதரிப்பாய் ,,

31. கயிலையில் வாழும் கற்பகமே போற்றி
32. கரும்பு வில்லைக் கையில் கொண்ட கலியாணி ,,
33. கங்கா நதிக்கரை வாழும் விசாலாட்சி ,,
34. காமேச்வரன் மகிழும் காமேச்வரி ,,
35. காமத்தை ஜெயித்த காமாட்சி ,,
36. கினியைக் கையில் கொண்ட கின்னரரூபி ,,
37. குதர்க்கமில்லா மனம்தருவாய் கோலவிழி ,,
38. குவலயத்தை ரட்சிக்கும் கோமதி ,,
39. குங்குமப்பூ நிறத்தாளே குமரியே ,,
40. குகனைப் பெற்ற உமாதேவி ,,
41. கேசவனின் தங்கையான ராஜ ராஜேஸ்வரி ,,
42. கேட்டவர்க்கு வரமளிக்கும் காந்திமதியே ,,
43. கோடி சூர்யப்ரகாச வதனி ,,
44. சண்டமுண்டனை சம்கரித்த சாமுண்டி ,,
45. சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்களை பாணங்களாய் தரித்தவளே ,,
46. சத்துருக்களை ஒறுக்கும் சாரதையே ,,
47. சங்கரன் பாதம் பணியும் சமயாம்பா ,,
48. சபேசனேடு நடமிடும் சிவகாமி ,,
49. சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபிணி ,,
50. சிந்தித்ததை அளிக்கவல்ல சிந்தாமணியே ,,
51. சிரித்துப் புரமெரித்த சிவப்பிரியே ,,
52. சிவனையே சோதித்த சாம்பவி ,,
53. சீர்காழியில் உறையும் திரிபுர சுந்தரியே ,,
54. சும்ப நிசும்பரை வதைத்த துர்க்காதேவி ,,
55. சூதறியா பாலகன் நான் துணையிருப்பாய் ,,
56. சூரிய சந்திரர்களை தாடங்கமாய் அணிந்த அகிலாண்டேஸ்வரி ,,
57. செல்வமே வடிவான சௌந்தரி ,,
58. சொக்கருக்கு மாலையிட்ட மீனும்பிகே ,,
59. சௌபாக்கியத்தைத் தரும் சௌதாமினி ,,
60. சௌந்தர்யத்தின் பிறப்பிடமாம் சியாமளையே ,,
61. ஞான சம்பந்தருக்கு அருளிய சிவசங்கரி ,,

62. ஞானத்தை அளிக்கும் ஞானம்பிகே போற்றி
63. தட்சனுக்காக வாதிட்ட தாட்சாயணி ,,
64. தனங்களை அள்ளித்தரும் தயாமித்ரையே ,,
65. திக்விஜயம் செய்த நடாதகை தேவியே ,,
66. தில்லையிலே தாண்டவமிடும் சபேசினி ,,
67. தீராவினை தீர்க்கும் தியாகேஸ்வரி ,,
68. துஷ்டர்களுக்கு அச்சத்தைத் தருபவளே ,,
69. தூயஎன் நெஞ்சிலே துணையிருப்பாய் ,,
70. தேன்போன்ற குரலுடைய தர்மாம்பிகா ,,
71. தேவாதி தேவர்களின் ஸேவிதையே ,,
72. தேடிவந்து ரட்சிக்கும் கிருபாகரி ,,
73. தை வெள்ளியிலே ஊஞ்சலிலே ஆடிடுவாய் ,,
74. தொண்டர்களின் உள்ளமெல்லாம் குடியிருப்பாய் ,,
75. தோகையே! தூயமணி மரகதமே ,,
76. நவநிதிகளின் இருப்பிடமான நவாட்சரி ,,
77. நாடெல்லாம் நயந்து அன்பு காட்டும் நிமலையே ,,
78. நாத வடிவானவளே நிரஞ்சனியே ,,
79. நிரந்தரமாய் ஆனந்தத்தைத்தரும் நிர்குணயே ,,
80. பண்டாசுரனை வதைத்த பாலாம்பிகே ,,
81. பர்வத ராஜன் மகளான பார்வதியே ,,
82. பகலை உண்டாக்கிய பஞ்சாட்சரி ,,
83. பதினறு பேறுகளையும் அளிக்கவல்ல பதிவிரதே ,,
84. பாபம் தொலைப்பவளே பராத்பரி ,,
85. பிறப்பறுக்க வந்த புவனேஸ்வரி ,,
86. பிணி தீர்க்கும் நாயகி பரமேஸ்வரி ,,
87. பிரளய காலத்திலும் பிரகாசிக்கும் பைரவி ,,
88. பீஜாட்சரத்தில் உறையும் பத்ராயை ,,
89. பூதப்ரேத பைசாசங்களிடமிருந்து காப்பாற்றும் வாராஹி ,,
90. பை நாகங்களை ஆபரணமாய் அணிந்தவளே ,,
91. மஹிஷாசுரனை வதைத்த மர்த்தனியே ,,

92. மலையாள தேசம் வாழும் மஹேஸ்வரி போற்றி
93. மலயத்வஜன் யாகத்தில் தோன்றிய அங்கயற்கண்ணி ,,
94. மதுரமான சிரிப்பை உடைய மதுரகாளி ,,
95. மனதுக்கும் வாக்கும் எட்டாத மதனசுந்தரி ,,
96. மலைவாழையை தோற்கடிக்கும் துடையயுடைய மகாராக்ஞி ,,
97. மங்களத்தைக் கொடுக்கும் மங்களாம்பிகா
98. மன்மதனை ஆளும் மகா மாயா ,,
99. மதங்க முனிவரின் தவப்பலனுகப் பிறந்த மாதங்கி ,,
100. மந்தகாச முகமுடைய மலர் வதனி ,,
101. மாரியாய் அருள் புரியும் கருமாரி ,,
102. மின்னல் கொடி போன்ற மனோன்மணியே ,,
103. மீனைப் போன்ற கண் படைத்த மீனாட்சி ,,
104. மூன்று குணங்களை உடைய மூகாம்பிகே ,,
105. மேகம் போன்ற கூந்தலை உடைய மதுமதியே ,,
106. மோகத்தை வெல்லவைக்கும் மாயாதேவி ,,
107. ஜலமயமான அம்ருதேஸ்வரி ,,
108. ஸ்ரீ சக்கரத்தில் வாழும் ஸ்ரீ லலிதாம்பா ,,

**அம்பிகை போற்றி முற்றியது**

